இந்த இதழில்...

பதவியேற்பு வைபவம்

—புகைப்பட ஆல்பம்

# கல்கி

KALKI 5.2.89 ரூ. 2.



# அந்த ஆறு நாட்கள்!

"என்ன கலைஞரே! நான் எவ்வளவு டென்ஷனா இருக்கேன், எலக்ஷன் தினத்திலிருந்து! நீர் என்னடாவென்றால், துளியும் பதற்றமில்லாமல் இருக்கிறீர்களே!'' என்று ஆச்சரியமாய்க் கேட்டாராம், பிரபல நியூரோ சர்ஜனும், கலைஞர் அபிமானியுமான டாக்டர். பி. ராமமூர்த்தி.

ஆம்! நாடே எலெக்ஷன் தினத்தன்று பரபரப்புக்குள்ளாகியிருந்த போது சாவகாசமாய் உட்கார்ந்து குங்குமத்துக்காகப் 'பாயும் புலி பண்டார வன்னியன்' தொடரின் அத்தியாயத்தைக் கலைஞர் எழுதிக் கொண்டிருந்தார்!

இதன் பின்னணி என்ன? நிச்சயம் தி.மு. கழகம் கோட்டையைப் பிடிக்கும் என்று கலைஞர் திடமாய் நம்பியதுதான். கலைஞர் தேர்தல் சுற்றுப் பயணத்தில் முதல் ரவுண்டு முடித்து விட்டுச் சென்னை திரும்பிய சமயம், கலைஞருக்கு நெருக்கமானவர்கள், 'வெற்றி வாய்ப்பு எப்படி?' என்று கேட்ட போது கலைஞர் சொன்ன பதில்: ''தொண்டர்கள் மிக அதிகமான நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள். நாம் 'வீக்' என்று நினைத்துக் கொண்டு போகிற இடங்களில் கூட உடன்பிறப்புக்கள், 'நாம்தான் ஜெயிப்போம்' என்கிறார்கள். எனவே நம் வெற்றியில் சந்தேகமே இல்லை.''

இந்தத் தேர்தலில் கலைஞர் அலை அடித்திருக்கிறது என்பது புரியத் தொடங்கியதும் வந்த டெலிபோன் வாழ்த்துக்களுக்குப் பொறுமையுடன் பதில் சொல்லத் திக்குமுக்காடிப் போய் விட்டனர் கலைஞர் குடும்பத்தினர். தேர்தல் முடிவுகள் வெளியாகத் தொடங்கிய பிற்பகலே, பாதுகாப்புக்காக, சி.ஐ.டி. போலீஸை அனுப்பி விட்டது அரசாங்கம்.

அண்ணா அறிவாலயத்திலும், முரசொலி அலுவலகத்திலும் கூடிய ஜனத்திரள் சொல்லி மாளாது. முரசொலி அலுவலகத்திலிருந்தும், அண்ணா அறிவாலயத்திலிருந்தும், எல்லாத் தொகுதி தி. மு. க. தலைமைத் தேர்தல் அலுவலகங்களுக்கும் எஸ்.டி.டி. போன் [illegible] தகவல் அறிந்து, [illegible] அறிவித்துக் கொண்டே இருந்தார்கள். அதுவும் அண்ணா அறிவாலய அறிவிப்புகள் சுவையாகவும், தொண்டர்களை உற்சாகப்படுத்துவதாகவும் இருந்தன. உதாரணத்துக்கு: ''வாணியம்பாடியிலே சமது லீடிங்! எந்த சமது? நமது சமது! லத்தீப் அணி சமது!''

அன்று நடந்த பிரஸ் மீட்டில் கலைஞரிடம் 'முடிசூட்டு விழா' பற்றிக் கேட்கப்பட்ட போது, கலைஞர் தமது முடியில்லாத தலையைத் தடவியபடி, ''எனக்குத்தான் முடியே இல்லையே!'' என்று கூறியதை, நிருபர்கள் சிரித்து ரசித்தனர்.

**பு**தன் கிழமை காலை ஒன்பதரைக்கு தி. மு. க. சட்ட மன்றத் தலைவர் தேர்தல்.



பிரசாரத்தின் போது



பேத்தியுடன்



* இருபது ஆண்டுகளுக்கு முன்னும்...

கருப்பு சிவப்புக் கரை பளிச்சிட, புது வேட்டி சட்டை அணிந்து புது எம்.எல். ஏக்கள் குழுமியிருந்தனர். ராதிகா, ராதா ரவி போன்றோரும் வந்திருந்தனர். நாஞ்சில் மனோகரன் கையில் 'மந்திரக்கோல்'. 'பளிச்'சென்று வந்தார் மொடக்குறிச்சி சுப்புலட்சுமி. கலைஞர் குடும்பத்தினரும், பெண் எம்.எல்.ஏக்களும் முதல் வரிசையில் அமர்ந்திருந்தனர். ஸ்டாலின் (வெள்ளைச் சட்டை, வெள்ளை பாண்ட்) வந்ததும், ஒரு சிலர் சால்வை போர்த்தினர். ஏழாவது வரிசையில், உட்கார்ந்து கொண்டார்!

ஆற்காடு வீராசாமி மைக்கைப் பிடித்துக் கொண்டு, ''தலைவர் பதவிக்கு, யார் வர வேண்டுமென்று விரும்புகிறீர்களோ, அவர் பெயரை முன்மொழியலாம்'' என்று அறிவித்ததும், கலைஞர் பெயரைப் பேராசிரியர் அன்பழகன் முன்மொழிய, ஒரே கை தட்டல். பின்னர் அதை இன்னொருவர் வழிமொழிய மறுபடி கரவொலி. வேறு பெயர்கள் ஏதும் முன்மொழியப்படாததால், கலைஞர் ஒருமனதாய்த் தேர்ந்தெடுக்கப்பட்டதாய் அறிவித்தார்கள். அடுத்து ரத்தினச் சுருக்கமான கலைஞரின் ஏற்புரை: ''தமிழ் நாட்டு மக்கள் தந்துள்ள பொறுப்பினை உங்களை நம்பி ஏற்றுக் கொள்ளுகிறேன். நன்றி. வணக்கம்!'' அதன்பின் ''வாழ்க'' முழக்கங்கள்.

பெரியார், அண்ணா, எம்.ஜி.ஆர்., பக்தவத்சலம் சமாதிகள், ராஜாஜி, காமராஜ் நினைவாலயங்கள் இங்கெல்லாம் மரியாதை செலுத்தி விட்டு கவர்னர் மாளிகையைக் கலைஞர் அடைந்த போது அங்கேயும் கழகத் தொண்டர்கள் நூற்றுக்கணக்கில் திரண்டிருந்தனர்.

கவர்னர் கலைஞரை வாழ்த்தி விட்டு, அமைச்சரவை அமைக்குமாறு கேட்டுக் கொள்ளும் கடிதத்தைக் கொடுத்தார்.

அங்கிருந்து முரசொலி அலுவலகத்தில் பணிபுரிபவர்களைச் சந்திக்க, முரசொலி காரியாலயம் வந்தார் கலைஞர்.

இப்போதும்





* எதிர்க் கட்சிகள் இணைப்பு மாநாடு....

மீண்டும் அண்ணா அறிவாலயம். பிரஸ் மீட்டின் போது மந்திரி சபை பற்றி ஒரு காலைப் பத்திரிகை நிருபர் கேள்வி கேட்ட போது, கலைஞரின் பதில்: ''அதைப் பற்றிக்



தம் பிறந்த நாளன்று பிச்சைக்காரர்கள் மறுவாழ்வுக்கு நிதி திரட்டுகிறார். (1971).



உடன்பிறப்புக்களின் ஏகோபித்த ஆதரவு

காலைப் பத்திரிகைகள் கவலைப்பட வேண்டியதில்லை!'' அதற்கேற்ப வியாழனன்று பகலில் வெளியான மந்திரி சபைப் பட்டியல் அன்று மாலை நாளிதழ்களில்தான் முதலில் இடம் பெற்றது.

**க**லைஞரின் பதவி ஏற்பு விழாவுக்கென வள்ளுவர் கோட்டம் அவசர அவசரமாய்ச் சீர் செய்யப்பட்டது. வழக்கமாய், ஆண்டுதோறும், பொங்கல் சமயத்தில் சுண்ணாம்பு அடிக்கிற பணி வள்ளுவர் கோட்டத்தில் நடைபெறும் என்றாலும், இவ்வாண்டு கலைஞர் வெற்றி பெற்று முதல்வராவார் என அரசு தரப்பில் எதிர்பார்க்கப்பட்டதால் வெள்ளையடிப்புப் பணி பொங்கலைத் தாண்டி ஒத்திப் போடப்பட்டதாம்! சவுக்கு மரச் சாரம் கட்டி, தேரின் மேல் பகுதி வண்ணம் பூசி முடிக்கப்பட்டு விட்டாலும் கூட, சாரங்கள் பிரிக்கப்படாத நிலையில்தான் விழா நடந்தது!

வள்ளுவர் கோட்டத்துக்கு வெளியில்



பிரிவுக்கு முன்னால்

எம். ஜி. ஆர். சமாதியில் அஞ்சலி.





அண்ணாவின் அன்புத் தம்பி

சென்னை மாவட்ட தி.மு.க. அமைத்த அண்ணா சிலைக்கு மாலையணிவித்து, கலைஞர் உரையாற்றுகிற மாதிரி ஏற்பாடு செய்யப்பட்டதால், அப் பகுதி முழுவதும் லாரி லாரியாய் மணல் அடிக்கப்பட்டது. சுற்றுப்புறத்து ரோடுகள் சீரமைக்கப்பட்டன. இரவு பகலாய் 'மைக்' டெஸ்டிங் நடந்தது! அண்ணா சிலைப் பகுதியில் மேடையமைப்புப் பணிகளை டி.ஆர். பாலுதான் முன்னின்று கவனித்தார்.



மிசா கட்டத்தில் சிறை சென்று திரும்பியபோது...





* தமிழ்நாட்டு மக்கள் தந்துள்ள பொறுப்பினை உங்களை நம்பி ஏற்றுக் கொள்கிறேன்."

காலை ஒன்பது மணியளவில் அமைச்சரவை பதவி ஏற்பு விழா தொடங்கும் என அழைப்பிதழில் போடப்பட்டிருந்தாலும் விழா ஒன்பதரைக்குத்தான் ஆரம்பித்தது. ஆனாலும் அதிகாலையிலிருந்தே தொண்டர்கள் ஆயிரக்கணக்கில் கூடியிருந்தனர். அழைப்பிதழ் இல்லாதவர்களை உள்ளே அனுமதிக்காததில் மிகவும் கண்டிப்பாய் இருந்தார்கள். அப்படியிருந்தும் அரங்கத்தில் சமாளிக்க முடியாத அளவுக்குக் கூட்டம்.

முதல் வரிசையில் என்.டி.ஆர்., கர்நாடக முதல்வர் பொம்மை, கேரள முதல்வர் நாயனார், வி.பி.சிங், அஜீத் சிங் போன்றோருக்கு நாற்காலிகள் ரிசர்வ் செய்யப்பட்டிருந்தன. ஆனால் கலைஞர் குடும்பத்தினர் வந்ததும், அவர்களை அந்த நாற்காலிகளில்



* சங்கீத நாடக சங்கத்தின் விருதை அண்ணாவிடம் பெறுகிறார். (1966–67)



தி.மு.க.வின் ஆரம்பகால ஆதரவாளர் ராஜாஜியுடன்...

* என்.டி.ஆருடன் — தேர்தலுக்கு முன் யோசனை...



* 1970 — இல் போப் ஆண்டவருடன் சந்திப்பு.



அமரச் செய்து விட்டார்கள்.

வி.பி. சிங், அஜித் சிங் ஆகியோர் முதலில் வந்து விட, அவர்களுக்கென ஸ்பெஷலாய் முன்னால் ஒரு வரிசை நாற்காலிகள் போடப்பட்டன. பொம்மை, நாயனார், என்.டி.ஆர், உபேந்திரா என்று ஒவ்வொருவராய் வர, வி.ஐ.பி. இருக்கைகள் எல்லாம் நிரம்பின. ஜோதிபாசுவும், மகந்தாவும் வருவார்கள் என எதிர்பார்க்கப்பட்டாலும், விழாவுக்கு அவர்கள் வரவில்லை.

மேடையில் கவர்னருக்கும் அவர் மனைவிக்கும், கலைஞருக்கும் ஸ்பெஷல் இருக்கைகள் போடப்பட்டிருந்தன. அவற்றின் இருபுறமும் மற்ற பதினாறு அமைச்சர்களுக்கான இருக்கைகள். கலைஞர் நுழைந்ததும், பார்வையாளர்கள் பகுதிக்குச் சென்று என்.டி.ஆர். போன்றவர்களைச் சந்தித்துக் கை குலுக்கினார். கவர்னர் வந்ததும், மற்ற அமைச்சரவைச் சகாக்களை அறிமுகம் செய்து வைத்தார்.

கவர்னர், 'மு. கருணாநிதியாகிய நான்' எனத் தொடங்கி, பதவிப் பிரமாண வாச



* ...தேர்தலுக்குப் பிறகு களிப்பு.



* வள்ளுவர் கோட்டம் விழாவில் — முன்வரிசையில் கலைஞர் குடும்பம்.



பதவியேற்பு விழாவில் — அமைச்சர்கள் சிலருடன்...

கத்தைத் தமிழில் வார்த்தை வார்த்தையாய்ப் படிக்க, கலைஞர் திருப்பிச் சொல்ல, 'முதலமைச்சராய் மட்டுமே வள்ளுவர் கோட்டத்துக்குள் அடியெடுத்து வைப்பேன்' என்ற அவரது சபதமும் நிறைவேறியது.

அடுத்து ரகசிய காப்புப் பிரமாணம். சொல்லி முடித்ததும், கலைஞர் பிரமாணப் பிரதிகளில் கையெழுத்திட்டு, கவர்னரிடம் கொடுத்தார்.

அடுத்து பேராசிரியர் அன்பழகனும் மூன்றாவதாய் சாதிக் பாட்சாவும் பதவிப் பிரமாணம் ஏற்றனர்; பன்னிரண்டாவதாய்ச் சுப்புலட்சுமி ஜகதீசன். கடைசியாய்த் தங்கவேல். கவர்னர் பதவிப் பிரமாண உறுதி மொழியினைப் படிக்க, அதைப் பதவி ஏற்பவர் திருப்பிச் சொல்ல, இரண்டுக்குமாய் அறுபது விநாடி பிடித்தது. அதே போல ரகசியக் காப்புப் பிரமாணத்துக்கு நாற்பத்தைந்து விநாடிகள்.

அடுத்து சென்னை நகர தி. மு. க. தொண்டர் படையின் அணிவகுப்பு மரியாதையை ஏற்றுக் கொண்டு, அண்ணா சிலைக்கு மாலையணிவித்து விட்டு உரையாற்றினார் கலைஞர்.

வெள்ளிக் கிழமை காலை பதவிப் பிரமாண விழா முடிந்தது. அன்று மதியம் தலைமைச் செயலகம் சென்றார் கலைஞர். கோட்டையில் முதலமைச்சரின் அறை... வெளிப்புற வாயிலையொட்டிய கட்டடத்தில், கடலை நோக்கியபடி, முதல் மாடியில் இருக்கிறது. இதுவரை எல்லா முதலமைச்சர்களுக்குமே இதுதான் அலுவலக அறையாய் இருந்திருக்கிறது. அறையை ஒட்டிய தாழ்வாரத்தில் இருபுறமும் தடுப்புக் கதவுகள். உள்ளே பிரம்மாண்டமான மேஜை. பெரிய குஷன் நாற்காலி. பின்புறத்தில் கவர்னரின் அறை. இன்னொரு புறம் லிஃப்ட். அதற்குப் பக்கத்திலேயே படிக்கட்டுகளும் உள்ளன.

முதலமைச்சர் அறையை சமீப காலம் வரை கவர்னர் பயன்படுத்தியதாய்த் தெரிகிறது. மற்ற மந்திரிகளின் அறைகளை சீரமைக்கும் பணி வெகு மும்முரமாய் நடந்து முடிந்தது.

தம் அரசியல் எதிரியான எம்.ஜி.ஆர். அமர்ந்த நாற்காலியில் கலைஞர் அமர மாட்டார்; முதல்வர் அறையை வேறு இடத்துக்கு மாற்றி விடுவார் என்று ஒரு சிலர் சொன்னார்கள். ஆனால், கலைஞர் மரபுகளை மீறாததுடன் எம்.ஜி.ஆர். சமாதியில் அஞ்சலியும் செலுத்தியதன் மூலம் காழ்ப்புணர்ச்சி ஏதும் தமக்கில்லை என்று காட்டிக் கொண்டார்.

டெய்ல்பீஸ்: 1

ராகுகாலம் தவிர்த்து, நல்ல நேரம் பார்த்து தான் கலைஞர் எல்லாக் காரியங்களையும் செய்தார் என்கிறார்கள். இது தற்செயலாக நிகழ்ந்ததா? திட்டமிட்டு நடந்ததா நாமறியோம்! பதவி ஏற்ற பின் திருவாரூக்குச் செல்வார் என்று பேசப்படுகிறது. தாயார் சமாதிக்கு அஞ்சலி செலுத்த என்று சிலரும் குலதெய்வத்தினிடம் உத்தரவு பெற என்று சிலரும் கூறுகிறார்கள்!

டெய்ல்பீஸ் 2

சட்டசபையில், எதிர்க் கட்சித் தலைவராய் ஜெயலலிதா வருவது கலைஞருக்குப் பிடிக்கவில்லை என்றும், அதைவிட காங்கிரஸ் வந்தால் கௌரவம் என்று கருதுவதாகவும் கிசுகிசுக்கப்படுகிறது. வெற்றி பெற்ற சுயேச்சை ஒருவரை காங்கிரசில் சேர்க்க, ஜெ. அணி, காங்கிரஸ் இரண்டும் சம பலம் பெறும். அப்புறம் பாரம்பரியம் மிக்க கட்சி என்பதால் காங்கிரஸுக்கு எதிர்க் கட்சி அந்தஸ்து கிடைக்க வழி செய்து விடலாம் என்பது திட்டமாம்!

— எஸ். சந்திரமௌலி.

புகைப்படங்கள்: கே. வி. ஆனந்த், சுபா

அட்டை வண்ணப்படம்: யோகா

# பாதிக்கு பாதி

# 50% வரை

இந்த 50% வரை தள்ளுபடி விலையில் உங்களுக்குப் பாதிக்குப் பாதி மிச்சம். சுபமூட்டி, சுகமளிக்கும் சுக்ல வருடத்தை சுறுசுறுப்புடன் வரவேற்க நீங்கள் மேஃபிளவரில் வாங்க வாருங்கள். இங்கு ஆண்களுக்கான ரேமாண்ட்ஸ், டிக்ஜாம், குவாலியர், விமல் போன்ற பிரபல மில்களின் சர்ட்டிங், சூட்டிங்குகளும், பெண்களுக்கான முதல் தரமான மில்களின் கட்டாவ், கார்டன், அர்விந்த், விமல், ராஜ் கமல் சேலைகளும், ஆண்களுக்கான ரெடிமேட் சர்ட் வகைகளும், குழந்தைகளுக்கான ரெடிமேட் ஆடைகளும் மற்றும் கட் பீஸ் துணிகளும் கிடைக்கும்.

## மேஃபிளவர்

94, மேல கோபுர வீதி, மதுரை 625 001.

இங்கு இல்லாதது வேறு
எங்குமே இருக்க முடியாது


அவள் அழகின் ரகசியம்...
கண்டிஷனர் நிறைந்த சிக் ஷாம்பூ
உங்கள் கேசத்திற்கு மெருகூட்டி பட்டுப்போல்
பளபளக்கச் செய்கிறது. மேலும் அதன்
இனிய நறுமணம் நாளெல்லாம் உங்களுக்கு
களிப்பூட்டும்.


சிக்
கண்டிஷனர் ஷாம்பூ
Chik
Conditioner Shampoo
120 ml ரூ. 14.20 (வரிகள் உள்பட)

இனிமை நிறைந்த பொழுதுகள்
''சிக்'' குடன் மட்டுமே !


Chik


ரூ. 1
மட்டுமே!

சிக் இண்டியா
11-C, பீச் ரோடு, கடலூர் 607 001.
போன்: 380, 211.



# ஒரு பொண்ணு நெனச்சா...



அப்பனுக்குத் தப்பாத பிள்ளை. இந்த இரண்டு வில்லன்களுமாய்ச் சேர்ந்து செய்யும் திமர் கொலைகள் இரண்டு. அவற்றுக்குப் பழிவாங்க 'ஒரு பொண்ணு நெனச்சு' செய்விக்கும் திட்டமிட்ட கொலைகள் இரண்டு. கணக்கு நேராயிடுச்சா?

இதுக்கான நடப்பு முறை இருக்கே, அதை ஜீரணிச்சிக்கணும்னா ஒண்ணு, சிண்டைப் பிய்ச்சிக்கணும்; இல்லே அறிவுபூர்வமா சிந்திக்கிறதைக் கைவிட்டுறணும். சாம்பிள் பார்க்கறீங்களா!

கன்னி வேட்டையாடி, கற்பழிக்கப்பட்டவளைக் கயிற்றிலே தொங்க விட்டு, தூக்குமாட்டித் தற்கொலை பண்ணிக் கொண்ட கேஸ் என்று பேர் பண்ணுகிறார் அப்பன் வில்லன். பையன் டிட்டோ. இப்பேர்ப்பட்ட கொடூரன், ஒரு பொண்ணைக் கடத்திட்டு வந்து அவள் மேலே கை வைக்கப் போன போது, 'நீ ஒரு அப்பனுக்கே பொறந்தவனா இருந்தா என்னைக் கல்யாணம் பண்ணிட்டு என் சம்மதத்தோட என் மேல கை வை,' என்று அவள் சொன்னதும், சடாரென்று விலகிக் கொள்கிறானாம். காதைத் தடவிப் பார்த்துக்க வேண்டியதுதான்!

சற்றே புஷ்டியான ராதாவின் முறைப்பும் திகைப்பும் சிரிப்பும் முணுமுணுப்பும் கொஞ்சத்துக்கும் கொஞ்சம் கொஞ்சல். மனசுக்கு ஆறுதல். அதிலும் குட்டி வில்லன் ராஜீவைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு புருஷனை வஞ்சனையாய்ச் சீண்டும் கட்டங்களில் இதம்.

தொப்பையும் தொந்தியுமாய் ஏழெட்டு நீச்சலுடை அழகிகளுடன் ராஜீவின் திறந்த மேனி ஆணழகும் அந்த நீச்சல் குளத்தில் அறிமுகமாகும் போது — ஐயே! ஆனால் அந்த நறுக்கு வசன ஸ்டைலில் தனி வில்லன் முத்திரை பதித்திருக்கிறார். 'நீ வக்கீலுக்குப் படிச்சவ. நைஸா போட்டோவை வாங்கினு என்னை டீல்ல வுட்டுட்டா என்ன பண்றது?' என்று கேட்கும் விதம்; 'என்னம்மா கண்ணு, என்னைய்யா கேட்டே ஆம்பிளைன்னு?' என்ற ஜெண்டில் முறைப்பு — டக்கர்தான்.

பாவம் மோகன். அவரைச் சொல்லிக் குற்றமில்லை. அவரை ஆட்டி வைக்கிறவர்கள்தான் அவரைக் கொண்டு போய் அதல பாதாளத்தில் இறக்கி விடுகிறார்கள். ஒருத்தி தன்னைக் காதலிக்கவில்லை என்று தெரிந்திருந்தும் அவர் ஆத்மார்த்தமாய் அவளைக் காதலிக்கிறாராம். அப்பேர்க்கொத்தவர் வில்லக் குஞ்சுகள் போல ஒரு கோஷ்டியுடன் வீதியில் அந்த ஒருதலைக் காதலியை வழி மறித்துக் காதல் பாட்டுப் பாடிக் கலாட்டா பண்ணுவாரா? கதாபாத்திரத்தின் மேல் குத்தும் கரும்புள்ளி அசல் பாத்திரத்தில் அப்பிக் கொள்கிறது. பாவம்!

ஜெய்சங்கர் கடமை தவறா கண்ணியக் காவல் அதிகாரியாய் வந்து அடியாட்களால் குத்துப்பட்டு அகால மரணமடைகிறார். இவருக்கு ராஜலட்சுமியும், ராதாவும்தான் இரண்டு பெண்கள் என்று நினைத்துக் கொண்டிருந்தால்... இவர் செத்துப் போன போது கூட எட்டிப் பார்க்காமல் படம் க்ளைமாக்ஸைத் தொடும் கட்டத்தில் கான்ஸர் நோயாளியான இன்னொரு பெண் உண்டு என்று செவிமலர் சூட்டப் பார்க்கிறார்கள். அதாவது வில்லன் ராஜீவுக்கு மனைவியாய் இருப்பவர் முதல் ராதா அல்ல; இரண்டாவது ராதாவாம். அய்ய...யோ!

சிரிப்பு மூட்ட எஸ்.எஸ். சந்திரனும், சார்லியும் கூட்டணி அமைத்திருக்கிறார்கள். ஹிஹி...

புதுசாய்ப் பார்க்க இந்த நேரத்துக்கு வேறு படம் ஏதும் இல்லை. ஆலை இல்லாத ஊருக்கு இலுப்பைப் பூ சர்க்கரை!

— பி. எஸ். எஸ்.


அபரிமித மெஜாரிட்டி
அடேயப்பா! பாரம் தாங்கலியே!






குதிரை கீழே தள்ளிடுச்சு! நாங்க குழியைப் பறிச்சுட டோம்!
தேர்தல்





# கல்கி

1989 பிப்ரவரி 5
மலர் 47 இதழ் 27
விபவ தை 23



## மூப்பனாருக்குக் குழி பறிக்கிறார்கள்!

தேர்தல் முடிவுகள் வெளிவந்த கையோடு மகா ஆச்சரியமான திடீர் ஞானோதயங்கள் பலருக்கும் ஏற்பட்டு வருகிறது.

"என் தாய்வீடு ஆட்சிக்கு வந்தது; என் தாய் வடிவில் கலைஞரைப் பார்க்கிறேன்" என்கிறார் சிவாஜி. காங்கிரஸ் அழிந்ததாம்; இவர் ஆசை நிறைவேறியதாம்! வீரப்பனின் ஞானோதயம் இதைவிடப் பிரமாதம். ஜானகி அணி தோற்றது பற்றி அவருக்குக் கவலையே இல்லையாம்! திராவிடர் இயக்கம்தான் தமிழகத்தை ஆளும் என்று எம்.ஜி.ஆர். கொண்டிருந்த லட்சியம் நிறைவேறி விட்டதாம். அதுவே இவருக்குப் போதுமாம்! நெடுஞ்செழியனோ, ஈ.வே.ரா., அண்ணா வழி வந்த தி.மு.க. ஆட்சி அமைவதில் மகிழ்ச்சி தெரிவித்து விட்டார்! இவர்களுடைய கடந்த கால, சமீப கால சரித்திரமெல்லாம் மக்களுக்குத் தெரியும். 'குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை' என்ற கதையாக இவர்கள் பேசுவதன் காரணமும் புரியும். மக்களுக்குப் புரிவது கலைஞருக்குப் புரியாமல் போகாது. எனவே அவர் எச்சரிக்கையாக இருப்பார் என நம்பலாம். அதோடு, வெற்றிச் செய்தி கேட்டதும் பெரிய பெரிய மாலைகளைத் தூக்கிக் கொண்டு அறிவாலயத்துக்கு ஓடோடி வந்த "பெரிய மனிதர்கள்" விஷயத்திலும் அவர் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். வஞ்சப் புகழ்ச்சியும் துதி பாடலும் லஞ்சம் கொடுப்பதை விடக் கொடிது.

> நகுதற் பொருட்டன்று நட்டல் — மிகுதிக்கண்
> மேற்சென்று இடித்தற் பொருட்டு.

வள்ளுவர் கோட்டத்தில் பதவி ஏற்கும் கலைஞர், திருக்குறளை மேற்கோள் காட்டுவதுடன், அதன்படி ஆட்சி நடத்தியும் காட்டுவார் என்று எதிர்பார்க்கிறோம்.

காங்கிரஸ் கட்சியிலும் ஏகப்பட்ட திடீர் ஞானோதயங்கள்! 'மூப்பனாரும் சிதம்பரமும் காங்கிரஸ் தோல்விக்குப் பொறுப்பு ஏற்றுப் பதவி விலக வேண்டும்; அவர்களாகப் பதவி விலகாவிடில் அவர்களைப் பதவி நீக்கம் செய்ய வேண்டும்' என்று சில இ. காங்கிரஸ் எம்.பிக்கள் போர்க் கொடி உயர்த்தியுள்ளனர். 'தனித்து நின்று ஜெயித்து விடலாம்' என்று மூப்பனாரும் சிதம்பரமும் மார்தட்டி, ராஜீவையும் அவமானப்படுத்தி விட்டார்களாம்! 'காங்கிரஸைப் படுகுழியில் தள்ளிய இந்தப் பெருச்சாளிகளை ஒழிக்க வேண்டும்' என்று இந்த அதிமேதாவிகள் சொல்கின்றனர்!

இவர்களுடைய கருத்துக்கு இசைவாகவே சிதம்பரமும் மூப்பனாரும் ஜெயலலிதாவுடன் கூட்டணி அமைத்திருந்தார்களானால் தமிழ் நாட்டின் இன்றைய நிலைமை என்னவாக இருந்திருக்கும்? கூட்டணி வென்றிருந்தால், ஜெயலலிதா அணி அறுதிப் பெரும்பான்மை பெற்றிருக்கும். ஜெயலலிதாவை முதல்வராக முடிசூட்டி விட்டு அவருக்குச் சிதம்பரமும் மூப்பனாரும் பன்னீர் தெளித்து, வெண்சாமரம் வீசும் நிலைக்குத் தள்ளப்பட்டிருப்பார்கள். இதைத்தான் இந்த காங்கிரஸ் எம்.பிக்கள் விரும்புகிறார்களா? ஜெயலலிதாவிடம் கை கட்டி நின்று ஊழியம் செய்ய எண்ணுகிறவன் 'காங்கிரஸ்காரன்' என்று தன்னைச் சொல்லிக் கொள்ளவே அருகதையற்றவன். பாரம்பரியப் பெருமை மிக்க அந்தக் கட்சியை இழிவு படுத்துகிறவன். கட்சிக்குள் கருத்து மாறுபாடும், உட்கட்சி ஜனநாயகமும் இருக்க வேண்டியதுதான். ஆனால் அது புத்திசாலித்தனமாகச் செயல்பட வேண்டும். கூட இருந்து குழி பறிப்பதாக மாறக் கூடாது. காங்கிரஸ் தலைமைப் பீடம் இத்தகைய அபத்தமான அறிக்கைகளுக்குச் செவி சாய்க்காது என்று நம்புகிறோம்.

"ஜெயலலிதாவுடன் காங்கிரஸ் கூட்டுச் சேர்ந்திருந்தால் அவருடைய புடைவைத் தலைப்பைப் பிடித்துக் கொண்டுதான் காங்கிரஸ் மவுண்ட் ரோடில் நடக்க முடியும் என்பதை ஒப்புக் கொண்டதாக ஆகும்" என்று தேசிய நாளிதழான ஹிந்துஸ்தான் டைம்ஸ் தனது தலையங்கத்தில் சரியான கணிப்பு செய்திருக்கிறது. கூடவே, 'ராஜீவ் காந்தியின் விஜயங்களின் போது அலையலையாகக் கூட்டம் வந்ததேயொழிய, வோட்டு விழவில்லையே' என்று ஆச்சரியமும் தெரிவிக்கிறது. தமிழக மக்களின் மனங்களைச் சரியாகப் புரிந்து கொள்ளாததால் ஏற்பட்ட அங்கலாய்ப்பு இது. தமிழக மக்கள் ராஜீவைப் பாரதப் பிரதமராகப் பார்க்கிறார்கள்; கருணாநிதியைத் தமிழக முதல்வராகக் காண்கிறார்கள். இதுதான் விஷயம். நாடாளுமன்றத் தேர்தல் இதோ வந்து கொண்டே இருக்கிறது. காங்கிரஸ்காரர்கள் சரித்திர ஏடுகளைப் புரட்டிப் பார்த்து ஊக்கம் பெறட்டும். ஒருவரை ஒருவர் குற்றம் சொல்லிக் கொண்டிராமல், ஒருவரோடு ஒருவர் ஒத்துழைத்துப் பாடுபடட்டும். ராமராவையோ, வி. பி. சிங்கையோ, தேவிலாலையோ, அஜீத் சிங்கையோ தமிழக மக்கள் தங்கள் பிரதமராகக் கருத மாட்டார்கள். ராஜீவின் சமீபத்திய தமிழக விஜயங்கள் வீண் போகாது.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

மிடுக்குடன் தோன்றும் எழில் மங்கை கேமராவுக்கு எதிரில் முதன்முறையாக...
நூறு ஆண்டுகளுக்கு முன்னால்.

நூறு ஆண்டுகளுக்கு முன்பாக எடுக்கப்பட்ட இந்த புகைப்படம்
[illegible]த்தைச் சேர்ந்த, திரு. [illegible] [illegible] அவர்களின் நினைவேடுகளில் இருந்து.

உங்கள் குடும்ப போட்டோ ஆல்பத்தைப்
புரட்டிப் பாருங்கள்!

பல்லாண்டுகளுக்கு முன் எடுத்த பிளாக் & ஒயிட்
படங்கள் இன்னும் கருக்கழியாமல்,
மங்காமல் இருப்பதைக் காண்பீர்கள்.

அதுவே பிளாக் & ஒயிட்
படங்களின் சிறப்பு! அறுபது, எழுபது,
எண்பது ஏன் நூறு வருடங்களானாலும் மங்காது.
சொல்லவும் வேண்டுமோ?

காலத்தை வென்றிடும் பிளாக் & ஒயிட் படங்களே
உங்களது தேர்வாக இருக்க முடியும்.




அழியாத நினைவுகளுக்கு காலத்தால்
அழியாத பிளாக் & ஒயிட் படங்கள்!




இந்து பிளாக் & ஒயிட் ரோல் பிலிம்
மற்றும் ப்ரோமைடு பேப்பர்.

Sista's-HPF.1046.88 TM A

மடமையைக் கொளுத்துவோம்:



# கண்ணை மூடிக்கொள்ளும் காந்தாரிகள்

''சென்னைப் பல்கலைக் கழகத்தில் படித்துப் பட்டதாரி ஆவோருள் 45 சதவிகிதம் பேர் பெண்கள். அது மட்டுமல்ல, அதிக மதிப்பெண் பெறுவோருள் எண்பது சதவிகிதத்தினர் பெண்கள்தான். ஆனால், அதற்குப் பின் இப்பெண்கள் எங்கே போகிறார்கள்? எப்படி மறைகிறார்கள்? அறிவியல், தொழில் நுட்பம் மற்றும் தொழில் வளர்ச்சி போன்ற தேசிய மேம்பாட்டு நடவடிக்கைகளில் அவர்கள் பங்கு பெறுவதில்லையே!''

— இவ்வாறு கூறியிருப்பவர் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் ஞானம். (நன்றி: மகளிர் சிந்தனை)



'கூண்டை விட்டு வெளியே வந்தது சிறகடித்துப் பறக்கவா இல்லை சீட்டெடுக்கவா' என்று கேட்கும் ஒரு புதுக்கவிதையை இந்தப் பிரச்னைக்கும் பொருத்திக் கொள்ளலாம். கதவு திறந்து வெளியே வரும் பெண்கிளிகள் பட்டம் என்னும் சீட்டை எடுத்துச் சமுதாயத்தின் கையில் கொடுத்து விட்டு மறுபடியும் உள்ளே சென்று விடுகின்றன. பெண்கள் முன்னேறியிருக்கிறார்கள் என்று புள்ளிவிவர ஜோசியம் கணிக்கப்படுகிறது.

இவர்கள் எங்கே போகிறார்கள்? நமக்குள்ளேதான் கரைந்திருக்கிறார்கள்! ஷங்கிரிலா போன்ற விந்தை மாளிகைகள் எதுவும் இவர்களுக்காகக் கட்டப்பட்டிருக்கவில்லை. இல்லத்தரசி, மனையாள், வாழ்க்கைத் துணைநலம் என்றெல்லாம் பெயரிலேயே (பேருக்கு?) முடிசூட்டிக் கோடு போட்டு, 'இராமனிருக்குமிடமே அயோத்தி' என்று சொன்ன பின்னால், அறிவியலுக்காகவும், தொழில் நுட்பத்துக்காகவும், எந்தப் பெண்ணால், ஏதோ ஒரு ஊரிலே தனியாகத் தொண்டு புரிய முடியும்? ஒரு விஞ்ஞானி, பொறியியல் வல்லுநர் அல்லது ஒரு பேராசிரியர் ஆணாக இருக்கும்போது, திருமணம் அவருடைய தொழிலைப் பாதிப்பதில்லை. ஆனால் பெண்களுக்குப் பெரும்பாலும் திருமணத்துக்குப் பிறகு ஓர் இடைவெளி ஏற்படுகிறது. வேலையை விட்டுவிட்டுக் கணவனோடு புகுந்த ஊருக்குச் சென்றால் இவர்கள் தகுதிக்கு ஏற்ற வாய்ப்புக் கிடைப்பதில்லை. எம். எஸ். ஸி கணிதம் படித்து விட்டு எல். கே. ஜி ஆசிரியையாகப் பணி புரிபவரைக் கூடப் பார்க்கிறோம். இந்தப் பிரச்னையின் ஒரு முகம் இது!

பல்கலைக்கழகத்திலே சேர்ந்து படிப்பவர்களில் பலருக்குப் பணியாற்ற வேண்டும் என்னும் நோக்கம் இருக்கிறதா? மேல் மட்டச் சமுதாயம், பெண்கள் ஊதியத்துக்காகப் பணியாற்றுவது கேவலம் என்னும் மனப் பான்மையை இன்னும் போக்கிக் கொள்ளவில்லை. செல்வம் படைத்த குடும்பங்களில் பெண்கல்வி என்பது வெறும் வாழ்க்கை ஒப்பனையாகவே உள்ளது! அவர்களுக்குக் கல்வி ஒரு தகுதிச் சின்னம் (**status symbol**) இது இப்பிரச்னையின் இன்னொரு முகம்!

''கல்வியில்லாப் பெண்கள் களர் நிலம்! அந்த நிலத்தில் புல் விளையலாம். நல்ல புதல்வர்கள் விளைவதில்லை.'' என்றார் பாரதிதாசன். அந்தவகையில் இவர்கள் நாட்



* நிர்மலா சுரேஷ்

டை நேரடியாக உயர்த்தவில்லையென்றாலும் வீட்டைத் திருத்தத் துணை செய்வார்கள் என்று வேண்டுமானால் நாம் திருப்திப்பட்டுக் கொள்ளலாம்!

நடுத்தரக் குடும்பங்களைப் பொறுத்தவரையில் பல்கலைக்கழகப் பட்டப் படிப்பு என்பது பெண்களுக்கு ஒரு துருப்புச் சீட்டு அல்லது ஜோக்கர்! எப்படி வேண்டுமானாலும் சொல்லலாம். கல்வி என்பதை வைத்து முன்னேற முடியுமா என்று முயன்று பார்க்கிறார்கள். பி. ஏ. முடித்தவுடன் திருமணமாகவில்லை. வேலையும் கிடைக்கவில்லை. சரி, இளங்கலைக்குப் பிறகு முதுகலை வகுப்பில் சேரலாம்! கலைத்துப் போடப்பட்ட வாழ்க்கையில் இந்தத் துருப்பு அல்லது ஜோக்கரை வைத்துக் கொண்டு அவர்கள் சீட்டு ஆடிக்கொண்டிருக்கிறார்கள்! வேலை கிடைத்தால் வெற்றிதான். கிடைக்காதபோது, திருமணச் சந்தையில் வைரக் கம்மல் போட முடியாத குறையை வேதியல் பட்டம் தீர்க்காதா? பத்துப் பவுன் குறைந்தால் அதைப் பௌதிகம் போக்காதா? என்று சில நம்பிக்கைகளைப் பற்றிக் கொண்டிருக்கிறார்கள்!

எங்கோ ஜோத்பூரில் உள்ள ஒரு ஆராய்ச்சிக்கழகத்தில் பணிபுரியும் வாய்ப்பு தன் பெண்ணுக்குக் கிடைத்தால் கூட, சென்னையில் உள்ள பெற்றோருக்குத் தொலை தூரம் அவளைத் தனியே அனுப்பத் துணிவில்லை. அவ்வளவு பாதுகாப்பான குடியரசு நாடு நம்முடையது!

ஓர் எளிய எழுத்தர் தொழில், ஆசிரியை தொழில் இப்படி மனைவி பணிபுரிந்து சம்பாதித்தால் கணவனுக்குக் கசப்பதில்லை. உயர்பதவிகளில் அமரும் பெண்களுக்குக் குடும்பத்தில் அமைதி கிடைப்பது, மிக அரிதாக உள்ளது. அவள் தன் நேரத்தில் பெரும் பகுதியை அலுவலகத்தில் செலவிடுவதும், சோதனைக் கூடத்தில் செயல்படுவதும் அவளுடைய வாழ்க்கைக்கே சோதனையாக அமைந்து நிம்மதியைக் குலைக்கிறது. கணவரின் தாழ்வு மனப்பான்மை, ஒரு பக்கம்; அலுவலகத்தில் உள்ள ஆண்களின் எகத்தாளம் மறுபக்கம்; இவை இரண்டுக்கும் இடையே அவளுடைய தன்மானம் மிதிபடுகிறது.

பெண்ணின் அழகை ஆராதிக்கவும், அடிபணியவும் தயாராக இருக்கும் ஆண்குலம், அவளுடைய அறிவைப் போற்றவும் மதிக்கவும் தயங்குவது ஏன்?

எவரும் நுழைய அனுமதிக்கப்படும் அரசியல்துறையிலும், இந்திரா காந்திக்கு நேரு தந்தை என்பது பின்பலமாகவும், பேநசிருக்குத் தந்தை புட்டோ என்பது பின்னணியாகவும் அமைந்தன. எந்தப் பின்பலமும் இன்றித் தலைமைக்கு உயர்ந்த பெண்கள் உலகில் மிகமிகக் குறைவான எண்ணிக்கையில்தான் உள்ளனர்.

ஒரு பெண், தனது அலுவலில் முழு ஈடுபாட்டுடன் பணியாற்றத் தேவையான சூழல் நம் நாட்டில் இல்லை. குழந்தைகளை நல்ல முறையில் பராமரிக்கும் காப்பகங்கள், வசதியான போக்குவரத்து ஆகியவை சிறந்த முறையில் அமைதல் வேண்டும். பணியாற்றுவது மனநிறைவையும் மகிழ்வையும் தர வேண்டும். ஆனால் குடும்பச் சுமைக்கும் மேலே, ஒரு தண்டனையாகவே அது பெரும்பாலும் அமைவதைப் பார்க்கிறோம்.

குடும்பத்தில் அவளுக்கு ஊக்கமும் அளிக்கப்படுவதில்லை. அன்றாடக் கடமைகளில், சிறிது தடுமாற்றம் ஏற்பட்டால் குற்றம் காணும் எத்தனை புக்ககத்தார், ஒரு பெண்ணுக்குப் பொதுவாழ்வில் ஏற்படும் சிறப்புக்களைப் பாராட்டுகிறார்கள்?

நமது நாட்டின் பத்தாம்பசலித் தனமான குடும்ப மரபுகள் நீங்காத வரை, இந்தப் படித்த பெண்கள் கண்ணைக் கட்டிக் கொண்ட காந்தாரிகளாகத்தான் இருப்பார்கள். திருதராட்டிரர்களுக்குப் பார்வை வந்தால்தான் இவர்களுக்கு விடிவு காலமா? அல்லது கையில் ஏந்திய கல்வி விளக்கோடு பூரித்த கண்களோடு, திருதராட்டிரர்களை இவர்கள் வழிநடத்துவார்களா? பதில் சொல்லப் போவது யார்? ஆண்களா? பெண்களா? அல்லது காலமா?

— நிர்மலா சுரேஷ்.

வேட்பாளர்: நான்தான் எம். எல். ஏ. தேர்தலில்தோற்றுப்போயிட்டேனே... அப்புறம் எதுக்காக என்னைப் பார்க்கக் கூட்டமா வந்திருக்கீங்க...?

கூட்டம்: நன்றி சொல்லிட்டுப் போக வந்தோமுங்க...!

— கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.



''தேர்தல்தான் முடிஞ்சு போச்சே... தலைவர் எதுக்காக இன்னும் 'உண்டியல்' குலுக்கறார்...?''

''தமிழக அரசின் நிதி நிலைமையை மறைமுகமாச் சுட்டிக் காட்டறார்...!''

— மேல்பட்டி வெங்கடேஸ்வரன்.



# போர்க்களத்திலும் கீதை: சமையலறையிலும் கீதை!

●● கர்ம யோகம்; பக்தி யோகம்; ராஜ யோகம் என்ற தலைப்புக்களில் கீதை நம்மிடம் பேசுகிறது. இவை என்ன என்பதை ஒரு சிறு உதாரணம் மூலம் விளக்கலாம். ஓர் இல்லத்தரசி நல்ல உணவைத் தயாரிக்கிறாள். "தன் வீட்டில் உள்ள எல்லாரும் மிகுந்த மகிழ்ச்சியுடன் தான் சமைத்த உணவை உண்ண வேண்டும். அதன் மூலம் அவர்கள் உற்சாகம் அடைய வேண்டும். உடல் நலம் பெற வேண்டும்" என்று எண்ணுகிறாள். இந்த மனோபாவனையில், அவள் சமைக்கும் போது ஒவ்வொரு செயலிலும் சுத்தத்தைக் கடைப்பிடிக்கிறாள். அவள் சமையல் செய்வது கர்ம யோகமாகும். அதில் அவள் கடைப்பிடிக்கும் தூய்மை இறை உணர்வாகும். அதாவது பக்தி யோகம். இந்த இரண்டும் சேர்ந்ததில் உருவாகும் உணவை அவள் தன்னலம் கருதாது முதலில் குடும்பத்தில் பிறர் நலனுக்கே காணிக்கையாக்குகிறாள். இல்லத்தரசியின் இந்த உன்னதமான சேவைதான் ராஜ யோகம்.

●● கடும் குளிரில், ஒரு பாலத்தின் அடியில் தாங்கவொண்ணாத துயரத்துடன் நடுங்கிக் கொண்டு படுத்திருந்த முந்நூறு ஏழைகளுக்குத் தன் தோள் மேல் சுமந்து வந்த கம்பளிப்போர்வைகளைப்பரிவுடன்போர்த்தினார் அந்த மாமனிதர். அதன் பிறகு 'இவ் வேழைகளே இறைவனின் தோற்றங்கள்' என்று இயேசுநாதரை வணங்கினார். அவர்தான் ஜெனரல் பூத். அவருடைய சடலத்தை (இங்கிலாந்து நாட்டு) அரசி தம் தோளில் சுமந்தாள். அவரை மகோன்னத நிலைக்கு உயர்த்தினாள்.

●● நன்மைக்கும் தீமைக்கும் நடைபெறும் போராகவே குருக்ஷேத்திரத்தில் நடைபெறும் போரை உருவகப்படுத்திக் காட்டுகிறது கீதை.

குருக்ஷேத்திரப் போர் எப்போதோ எங்கோ, பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கும் மட்டும் நடைபெறவில்லை. நம் உள்ளுக்குள் ஒவ்வொரு கணமும் குருக்ஷேத்திரப் போர் நடைபெற்றுக் கொண்டே இருக்கிறது.

நம் மனத்தில் ஒரு புறம் நல்ல எண்ணம் இருந்தால் இன்னொரு புறம் தீய எண்ணமும் இருக்கிறது. இந்த இரண்டு குணங்களுக்கும் தனித் தனியே தளபதிகள் இருக்கிறார்கள். நல்ல குணத்தின் தளபதி தைரியம். தீய குணத்தின் தளபதி, பயம்... சந்தேகம்.

அஞ்சாமைதான் மனிதனுக்கு உண்மையான செல்வம். அந்தக் குணத்தின் மூலமாகத்தான் சத்தியத்தை, அகிம்சையை நிலைநாட்ட முடியும்.

●● காந்தி மகானின் மகத்தான தியாகத்தினால்தான் இந்தியா விடுதலை பெற்றது. விடுதலை பெற்ற இந்தியாவில் அவர் எந்தப் பயனையும் பெறவில்லை. அதாவது எந்தப் பதவியிலும் அமரவில்லை. அதே சமயத்தில், தம் தியாகத்தினால்தான் இந்தியா விடுதலை அடைந்தது என்று அவர் ஆணவமும் கொள்ளவில்லை.

பலநூறு ஆண்டு காலமாக அடிமைப் பட்டுக் கிடந்த பாரத தேசம், சுதந்திரத் திருநாளைக்கோலாகலமாகக்கொண்டாடிக் கொண்டிருந்தது. அந்தக் கொண்டாட்டம் எதிலும் அவர் கலந்து கொள்ளவில்லை. நவகாளியில் இந்து முஸ்லிம் ஒற்றுமைக்கு மீண்டும் பணியாற்றிக் கொண்டிருந்தார். கல்லிலும் முள்ளிலும் கால் நோக யாத்திரை செய்து கொண்டிருந்தார்.

தியாகத்தினால் ஏற்படும் பயனைத் துறப்பது அந்தத் தியாகத்தின் புகழினால் ஆணவம் கொள்ளாமல் தொடர்ந்து மனித குலத்தின் நன்மைக்காகத் தொண்டாற்றுவது என்பது இதுதான்.





● கிரிதாரிபிரசாத்

●● நாம் எந்தக் காரியம் செய்தாலும் இறை உணர்வுடன் செய்ய வேண்டும். இந்த மனோபாவம் ஆன்ம அனுபவம் பெறத் துணை செய்யும்.

சமையல் செய்யும் போது மனத்தில் ஏதாவது ஒரு சினிமாப் படத்தின் நினைவு இருக்குமானால் அந்த விகாரத்தின் பரம அணு சமையலிலும் நுழைந்துவிடும். பரிசுத்தமான இறை உணர்வுடன் சமையல் செய்வோமானால் உண்பவர்கள் நல்ல சக்தி பெறுவார்கள்.

●● 'கீதைத் தாய்' — 'கீதா மயீ' — என்றே கீதையை அழைத்தார் காந்தி மகாத்மா.

"என்னைப் பெற்ற தாயை இழந்து விட்டேன். ஆனால் அந்த இடத்தில் கீதைத் தாய் அமர்ந்து எனக்கு வழிகாட்டி வருகிறார். என்னை முழுமையாக ஏற்றுக் கொண்டு விட்டார்.

"கீதைத் தாய்க்கு என் விஷயத்தில் ஒரு நாளும் மனமாற்றம் ஏற்பட்டதில்லை. அவர் ஒரு போதும் என்னைக் கைவிட்டதில்லை. எனக்கு இன்னலோ துயரமோ நேரும் போதெல்லாம் கீதைத் தாயின் மடியில் தஞ்சம் புகுகிறேன்" என்று சொல்கிறார், மகாத்மா காந்தி.

தொகுப்பு: **சுப்ர பாலன்**

**கீதைப் பேருரை — கிரிதாரிபிரசாத். விலை ரூ. 50.00. வெளியீடு: இராமலிங்கர் பணிமன்றம், 101, மௌண்ட் ரோடு, கிண்டி, சென்னை — 600 032.**

புதிய முதல்வருக்கு யோசனைகள்!



# அரசுப் பணிகளில் அரசியல் தலையீடு கூடாது!

• ஜாதிச் சங்கங்கள், அவற்றின் தொடர்பான ஊர்வலங்களைத் தடை செய்யச் சட்டம் இயற்ற வேண்டும்.

• அரசு அலுவலகங்களில் கோப்புகள் 48 மணி நேரத்திற்குள் செக்ஷன்களிலிருந்து பைசல் செய்யப்பட வேண்டும்.

• அரசுத் துறை அதிகாரிகள், அமைச்சர்கள் ஜாதி, மதக் கூட்டங்களில் எக் காரணத்தைக் கொண்டும் கலந்து கொள்ளக் கூடாது என்று விதி ஏற்படுத்த வேண்டும்.

— இதயகீதம். அ. இராமானுஜம், சென்னை — 75.

• காங்கிரஸ் ஆட்சிக்குப் பின் BHEL போன்ற மாபெரும் தொழிற்சாலை தமிழ் நாட்டில் நிறுவப்படவில்லை. வருகின்ற முதல்வர் வேறுபாடுகளை மறந்து, மத்திய—மாநில உறவுகளை வளர்த்து, மாபெரும் தொழிற் சாலைகளைத் தமிழகத்தில் நிறுவ வேண்டும்.




• அரசியல் ஊடுருவல் இல்லாத ஆட்சி முறையை அமைக்க வேண்டும். கோட்டையே கதி என்று கிடக்காது, அவ்வப் போது மாநிலம் முழுவதும் பயணம் செய்து, அதிகாரிகள் மக்கள் குறைகளைக் களைந்தார்களா என்று follow-up நடவடிக்கைகளை மேற்கொள்ள முன்வர வேண்டும்.

• கரிகாலன் தன் காலத்துக்காக மட்டுமே அணை கட்டவில்லை. அது போல எதிர் காலச் சிந்தனையோடு, தமிழ் நாட்டில் ஆக்கபூர்வமான வளங்களைத் திட்டம் தீட்டிச் செயல்படுத்த வேண்டும். இதற்காக அனுபவமிக்க கல்வியாளர்களை, பொறியாளர்களை, விஞ்ஞானிகளை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். போஸ்டர்களையும் ஆடம்பர விழாக்களையும் முழுமையாகத் தவிர்க்க வேண்டும்.

— கே. வி. எஸ். சுந்தரம், திருச்சி — 14.

• ஒருவர் மருத்துவம் படித்து, டாக்டர் ஆவதற்கு, அரசு சுமார் இரண்டு லட்சம் ரூபாய் பொது மக்கள் வரிப் பணத்தில் இருந்து செலவு செய்கிறது. அதே போல் பொறியாளர் படித்துப் பட்டம் பெறவும் அரசுப் பணம் செலவு செய்யப்படுகிறது. ஆனால் டாக்டராகப் பணிபுரிய அரசு மருத்துவ மனைக்கு வருவோர் தாங்கள் மக்கள் பணத்தில் படித்தவர்கள் என்பதையே மறந்து, மிக அலட்சியமாக நடந்து கொள்கிறார்கள். தனியார் மருத்துவ மனைகளிலும் இந்தப் போக்கு அதிகரித்துக் கொண்டிருக்கிறது. அதே போல் மராமத்துப் பணிகள், ரோடு போடுதல் போன்றவற்றை ஏற்கும் பொறியாளர்களும் சரிவரச் செயல் படாததால் அரசுப் பணம் அழிகிறது. எனவே மருத்துவ, பொறியியல் துறையில் பணியாற்றுவோர் குறித்து மக்கள் குறை தெரிவித்தால் அரசு அவர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

• கிராம மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ்,




வேலை வாய்ப்பு, ஆடு மாடு வளர்த்தல் போன்றவற்றுக்குக் கொடுக்கப்படும் மானியத் தொகை முழுவதும் உரியவர்களுக்குப் போய்ச் சேர முழு முயற்சி செய்ய வேண்டும். மூவாயிரம் அல்லது நாலாயிரம் ரூபாய்க்கு ஒருவர் மாடு வாங்கினால் ஒரு நாளைக்குச் சுமார் 12 முதல் 15 லிட்டர் பால் கறக்கலாம். இதே தொகை இடைத்தரகர்களால் பங்கு போட்டுக் கொள்ளப் பட்டால் 1½, 2 லிட்டர் கறக்கும் மாடுதான் வாங்க முடியும். இவ்வாறு செய்தால் எப்படி கடனை அடைக்க முடியும்? மக்கள் கடனாளிகள் ஆவதுடன் அரசை ஏமாற்றத்தான் நினைப்பார்கள். இந்நிலை தொடர விடக் கூடாது.

• சட்டசபை உறுப்பினர் தான் தேர்ந்தெடுக்கப்பட்ட தொகுதி மக்களுக்குச் சதா பாடுபடும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். தம் தொகுதி மேம்பாடே தம் மேம்பாடு என்று ஒவ்வொரு சட்டசபை உறுப்பினரும் எண்ணும்படி முதல்வர் செய்ய வேண்டும். அவ்வாறு செயல்படாத எம்.எல்.ஏ.க்கு மக்கள் தந்த அங்கீகாரத்தை வாபஸ் பெறும் உரிமையை மக்களுக்கு முதல்வர் பெற்றுத் தர வேண்டும்.

ச. குடவரசி இளங்கோவன், சிதம்பரம்.

• வேலை வாய்ப்புடன் கூடிய ஆக்க பூர்வமான திட்டங்களைச் செயல்படுத்துதல்.

• அரசு அலுவலகப் பணிகளில் அரசியல் தலையீட்டைத் தவிர்த்தல்.

• கட்சிப் பணிகளுக்கு அரசு முறைச் சுற்றுப் பயணங்களை மேற்கொள்ளாதிருத்தல்.

— கே. ரவிச்சந்திரன், கல்கத்தா — 45.

• வெற்றி பெற்ற நீங்கள் இனி எந்தக் குறிப்பிட்ட கட்சிக்கும் உரியவரல்ல; மக்களுக்குரியவர் என்பதை மட்டும் மனத்தில் வையுங்கள். நீங்கள் அமைக்கவிருக்கும் மந்திரி சபை நாட்டில் இன்றிருக்கும் நெருக்கடிகளைச் சமாளிக்கும் ஆற்றல் பெற்றதாக இருக்க வேண்டுமேயன்றி உட்கட்சி நெருக்கடிகளைச் சமாளிக்க உதவுவதாக மட்டும் இருந்தால் போதாது.

• இனி நீங்கள் வகுக்கும் திட்டங்கள் அடுத்த தேர்தலுக்கு ஆதாயம் தருவதாக இருப்பதோடு, அடுத்த தலைமுறையினரும் ஆதாயமடையக் கூடியதாக இருக்கட்டும். ஆனால் சமூகத்தின் எந்தத் தரப்பினரையும் தனித் தனியாகத் திருப்திப்படுத்த நினைக்காதீர்கள். அது தற்காலிகமான பயனையே அளிக்கும். அனைத்து மக்களையும் திருப்திப் படுத்துவதே உங்கள் குறிக்கோளாக இருக்கட்டும்.

• அரசியல்வாதிகளுக்கு நேர்ந்திருக்கும் அவப்பெயரைப் பயன் கருதா உங்கள் தியாக வாழ்க்கையின் மூலம் பரிசுத்தப்படுத்துங்கள். அது ஜனநாயகத்தின் மேல் மக்களுக்கு மேலும் நம்பிக்கை ஏற்படுத்த உதவும்.

கௌதமன், திருச்சி — 14.

• நதி நீருக்குப் பக்கத்து மாநிலங்களிடம் நாம் கெஞ்சிக் கையேந்தியது போதும்! தஞ்சை — இராமநாதபுரம் — மதுரை மாவட்டத்திற்கு இடையில் பூமிக்கடியில் கடல் போல் நிலத்தடி நீர் பரவிக் கிடப்பதாக விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். இதைப் பயன்படுத்தி நீர் வளத்தையும் நில வளத்தையும் பெருக்கிட வழி காண வேண்டும்.

• மின்சாரப் பற்றாக் குறையினால் தொழிற் சாலைகள் தற்போது நாற்பது சதவிகிதம்தான் செயல்படுகின்றன. அரசு நடத்தும் நூற்பாலைகள் கூட மின்சாரப் பற்றாக்குறையினால் மூடிக் கிடக்கின்றன. உற்பத்திக் குறைவைப் போக்கவும் தொழிலாளர்களின் வேலை இல்லாத் திண்டாட்டத்தைப் போக்கவும் திட்டங்கள் தீட்டிச் செயல்படுத்த வேண்டும்.

• அரசுப் பணிகளில் துரித நடவடிக்கையிருக்க வேண்டும். ஃபைல்கள் ஆமை வேகத்தில் நகர்வதைப் போக்கக் கவனம் வேண்டும். உதாரணமாக எங்கள் ஊரில் 1973—ம் ஆண்டு ஆரம்ப சுகாதார நிலையத்தை நவீனப்படுத்த வேண்டினோம். பொது மக்கள் பணத்தில் இதற்கு மூன்று ஏக்கர் நிலமும் வாங்கிக் கொடுத்தோம். ஆனால் சென்ற மாதம் வரை இதற்கு அரசு ஆணை கிடைக்கவில்லை. கடந்த வாரம்தான் அரசு ஆணை கிடைத்திருக்கிறது. 'ஆறு லட்ச ரூபாயில் கட்டடம் கட்டப் போகிறோம். பொது மக்கள் பங்குத் தொகை பத்தாயிரம் ரூபாய் உடனடியாகக் கட்ட வேண்டும்' என்று! பதினைந்து ஆண்டுகளாய் எங்கள் வேண்டுகோள் 'ஃபைல்' எப்படித் தூங்கியிருக்கிறது! இப்படி இனி இருக்காமல் அரசுப் பணிகள் விரைவாக நடைபெற வழி செய்ய வேண்டும்.

வேடசந்தூர், வி. நாகசுந்தரம்.

# சுக போகத் தீவுகள்

## 4

பிரபஞ்சன்

காலம் நள்ளிரவைத் தாண்டியிருந்தது:

முற்றும் வித்தியாசமான சூழலில் ஒரு பகல் பொழுதைக் கழித்த உணர்வோடு தன் அறைக்குள் நுழைந்தான் கிருஷ்ணமூர்த்தி. பேண்ட்டையும் சட்டையையும் களைந்து, கைலியோடும் பனியனோடும் எழுது மேஜைக்கு முன் வந்து அமர்ந்தான். மனம் பொங்கிக் கொண்டிருந்தது. உற்சாகமா, அன்றிப் புதிய சூழ்நிலையா, எதுவென விளங்கவில்லை.

தினம் தினம் அல்ல எனினும் அவ்வப்போது டைரி எழுதும் பழக்கம் அவனுக்குச் சமீப காலமாக ஏற்பட்டிருந்தது. எழுந்து பெட்டியில் இருந்த டைரியை எடுத்து எழுதத் தொடங்கினான்.

'வெளியே இருள் நரைத்த தலை மாதிரி உலகைக் கவிந்திருக்கிறது. வீதி விளக்குகள் நரை வெளிச்சம் தொடாத இடங்கள் கரிய முடிகள்.

மாமா ஆதரவாகத்தான் பேசுகிறார். இவர் எந்த அளவுக்கு நல்லவர், நம்பகமானவர்? தெரியவில்லை! ஆயினும், என் வாழ்க்கையை அவரிடம் ஒப்புக் கொடுத்து விட்டேன். இந்தக் களிமண்ணைப் பிசைந்து ஏதேனும் உருவம் சமைக்க வேண்டியது அவர் வேலை.

தமிழகத் தலைநகரில் காலை வைத்ததுமே பணத்தைப் பறி கொடுத்தேன். பறி கொடுப்பது இந்தப் பணத்தோடு மட்டும் நிற்க வேண்டும். அது தொடரக் கூடாது.

ஏராளமான என் கனவுகளில் ஒரு காலத்தில் வந்து சென்ற கோகிலா ரத்தமும் சதையுமாக அருகே நின்று பார்க்க வாய்த்தது. விநோதினி என்ற பெயர் கொண்ட அவள் மகளுடன் பேசினேன். பிளேடின் கூர்மை அவள் அறிவு. தெரிந்தெடுத்த வார்த்தைகளைக் கொண்டு பேசுகிறாள். கல்வி, சிந்தனை, ஆகிய சாயங்கள் தோய்த்த அவள் பேச்சை நான் முழுக்கக் கேட்க வேண்டும் போல் இருக்கிறது. அழகாய் இருக்கிறாள். இதை அவளிடம் சொல்ல முடியாது. எதை வைத்து என்னை அழகி என்கிறாய், அந்தகனே என்பாள்.

அப்பாவும், அம்மாவும், சரசுவும் என்னையே நினைத்துக் கொண்டு படுத்துக் கிடப்பார்கள். அப்பா வெளியே அன்பைக் காட்ட மாட்டார். அது அவர் சுபாவம். ஆனால் அவர் உடம்பும், மனசும், முழுக்க முழுக்க அன்புதான். இந்த வயசில், நான் ஊருக்குப் புறப்படுகிறேன் என்றதும் நான் அறியாமல் என் சட்டை பேண்ட்டுகள் அனைத்தையும் கொடியிலிருந்து உருவித்துவைத்துக் காய வைத்து, இஸ்திரி போட்டு வாங்கி வந்து, யாரும் அறியாமல் பெட்டியில் வைத்துவிட்டு, தெய்வமே என்று திண்ணையில் அமர்ந்து புகைத்துக் கொண்டிருந்தாரே, அந்த ஆத்மாவுக்கு நான் எந்த வகையில் நன்றி செலுத்தக் கூடும்? என் நினைவாகத் தூக்கம் பிடிக்காமல், புரண்டு புரண்டு படுத்து 'மூச் மூச்' சென்று சத்தம் இன்றிக் கண்ணீர் பெருக்கும் அம்மாவுக்கு நான் எதைக் கொடுத்தால் ஈடாகும்? அண்ணன் என்று வரும், எப்போது அண்ணனைக் காண்போம் என்று கிணற்றடித் துவைக் கல்லின் மேல் உட்கார்ந்து செம்பருத்திப் பூவோடு பேசிக் கொண்டிருக்கும் சரசுவை என்று காண்பேன் இனி?

மூர்த்தி டைரியை மூடி வைத்தான். மனசின் பாரம் நீங்கியது போல் இருந்தது. ஜன்னல் ஓரம் வந்து நின்றான். நிலா வெளிச்சம் குறைந்து போனது மாதிரி இருந்தது. கண் சிமிட்டிக் கொண்டு ஒரு விமானம் பறந்து கொண்டிருந்தது, தெரிந்தது. விளக்கை அணைத்துப் படுத்தவன் உறங்க வெகு நேரம் பிடித்தது.

அப்பா ஏற்படுத்திய பழக்கம் அது. இரவு எவ்வளவு நேரம் சென்று படுத்தாலும் விடியற்காலை ஐந்து மணிக்கெல்லாம் விழித்துக் கொள்வான் மூர்த்தி. சூரிய உதயத்துக்குப் பிறகும் உறங்குவது இயற்கைக்குச் செய்கிற துரோகம் என்பார் அப்பா.

வீதியில் இருந்து விசித்திரமான நகரத்துக்கே உரிய ஓசைகள் வந்த வண்ணம் இருந்தன. நகரத்து மனிதர்களுக்குக் காலை நேர உணவான பாலும் பேப்பரும் போடும் பையன்கள், ஆயாக்களின் அரவங்கள் என்பதைப் பின்னாளிலேயே அவன் அறிந்து கொண்டான். எழுந்து பரபரவெனக் குளித்து விட்டுக் கீழே இறங்கி வந்தவனுக்கு ஆச்சரியம் காத்திருந்தது.

மாமா அவனுக்கு முன்னமேயே குளித்து ஆயத்தமாகி விட்டிருந்தார். கண்ணைப் பறித்தது அவர் வெள்ளை ஆடை. இவர்களுக்கு — இந்த அரசியல்வாதிகளுக்குத்தான் — எங்கு கிடைக்கிறது இந்த வெள்ளை உடைகள்? நேற்று வந்திருந்த சேர்மன் கூட இவ்வகை ஆடையே அணிந்திருந்தார். முழுக்கைச் சட்டை. புரளப் புரள இரட்டைக் கரை வேஷ்டி. துண்டை நான்காக மடித்துத் தோளில் போட்டிருந்தார்.

''என்ன மாமா, அதற்குள் ரெடியாயிட்டீங்களே...!''

''இதுவே லேட். தலைவர் நாலு மணிக்கே குளிச்சு, ஃப்ரெஷ்ஷா ஆயிடுவார், தெரியுமா?''

''நாலு மணிக்கா?''

''ஆமாம். கட்சி உடைந்த போது, என்னை விடிகாலை நாலு மணிக்கு வரச் சொன்னார், ஒரு முறை. நான் மூன்றரை மணிக்கே ஆஸ்ரமத்துக்குப் போய்விட்டேன். தலைவர் வீட்டை நாங்கள் ஆஸ்ரமம் என்றுதான் சொல்வோம். தலைவர் அந்த நேரத்தில் கவிஞர் கருணாமூர்த்தியோடு பேசிக் கொண்டிருந்தார். நீ கேட்டாயே, அதே கேள்வியை நான் தலைவரிடம் கேட்டேன், ஐயா உறங்கவே இல்லையா என்று. 'அரசியல்வாதி தூங்கவே கூடாதுப்பா. தூங்கினாலும் கூடக் கால் கட்டை விரலை ஆட்டிக்கிட்டே தூங்கணும். அப்போதான் அவன் உயிரோடு இருக்கிறதா மற்றவன் நினைப்பான். இல்லேன்னா, செத்துட்டதா நினைச்சு சந்தோஷமா கொண்டு போய்ப் புதைச்சுட்டு வந்துடுவான்' என்று சொன்னார்.

''கவிஞர் கருணாமூர்த்தி இப்போ நம்ம கட்சியிலே இல்லையே...?''

''ஆமாம். கட்சி மாறி இருக்கார். ஆனா அவர் கட்சி மாறுவார் என்று, அன்றைக்கே, அவர் தலைவரைச் சந்திக்க வந்த அன்றைக்கே தலைவர் சொன்னார். உண்மையில், கவிஞரை எனக்கு அறிமுகப்படுத்தவே அன்று விடியற்காலை வரச் சொல்லியிருந்தார் தலைவர். கட்சி உடைந்து தலைவர் தனிக் கட்சி தொடங்கியிருந்த சமயம், தலைவர் தேறுவாரா மாட்டாரா என்று இருந்த சூழ்நிலை. அப்போது தம் கட்சிக்கு என்று புது சாய்ப் பத்திரிகை ஒன்றை ஆரம்பிக்கலாம் என்று வந்தார் கவிஞர். தலைவர் அந்த யோசனையை ஒப்புக் கொண்டார். தலைவர் சிறப்பாசிரியராய் இருப்பது. கவிஞர் ஆசிரியர். நான் நிர்வாகி என்று அப்போது முடிவாயிற்று. கவிஞரை அனுப்பிவிட்டு, தலைவர் என்னிடம் என்ன சொன்னார் தெரியுமா?

'நாயகம்! இந்தப் பையன் மதுரை தியாகராசர் கல்லூரியில் படித்து எம். ஏ. எழுதி, தேர்வு முடிவு தெரியாமல் இருந்த சமயம், நம் பழைய கட்சித் தலைவர் தயாநிதி இவனுக்கு பி. ஆர். ஓ. பதவி கொடுத்தார். நிறைய உதவிகள் செய்திருக்கிறார். அப்படி இருந்தும், அந்த நன்றியை மறந்துவிட்டு, எந்த உதவியும் செய்யாத என் பின்னால் வருகிறேன் என்கிறான். தயாநிதிக்குத் துரோகம் செய்கிறவன் எனக்குச் செய்ய எத்தனை காலம் ஆகும். ஆகவே, நாம் இந்தப் பையனைப் பயன்படுத்தவும் வேண்டும். ஜாக்கிரதையாகவும் இருக்க வேண்டும். பத்திரிகைக்கு அவன் ஆசிரியர் மட்டும்தான். பத்திரிகை நம் கையில், நமக்குச் சொந்தமாக இருக்க வேண்டும்,' என்றார்.''

''மாமா! கருணாமூர்த்தி தயாநிதிக்குத் துரோகம் செய்தவர் என்றால், நீங்களும் தானே அவருக்குத் துரோகம் செய்து இருந்தீர்கள்? தயாநிதி கட்சியில் எம். எல். ஏ. ஆகி, தலைவர் கட்சிக்கு வந்தீர்கள். உங்களை மட்டும் தலைவர் எப்படி நம்பினார்?''

மாமா கண்ணாடியின் வழியாக அவனை உற்றுப் பார்த்தார். பிறகு புன்னகை செய்து கொண்டார்.

''கரெக்ட். இப்படித்தான் கேட்கணும். என் மாவட்டத்தில் எனக்குச் செல்வாக்கு



வளர்வது தயாநிதிக்குப் பிடிக்கவில்லை. ஆகவே, மாவட்டச் செயலாளர் என்ற பெயரில் நம் சாதிக்காரன் ஒருவனையே எனக்கு எதிராய் வளர்த்தார். அது எனக்குப் பிடிக்கவில்லை. தலைவர், நான் கட்சி மாறினால் எம். எல். ஏ. பொறுப்போடு, மாவட்டச் செயலாளராகவும் இருக்கலாம் என்றார். நான் கட்சி மாறினேன். மீண்டும் நான் தயாநிதியிடம் போக மாட்டேன் என்று அவர் நம்புகிறார். அந்த நம்பிக்கையை நானும் இப்போதைக்குப் பொய்யாக்க விரும்பவில்லை.''

மூர்த்தி திடுக்கிட்டான்.

''என்ன மாமா. இப்போதைக்கு என்றால்? நீங்கள் மீண்டும் தயாநிதி கட்சிக்குப் போவீர்களா, என்ன?''

''குழந்தை! பச்சைக் குழந்தை! அரசியலில் எதிரி யார், நண்பன் யார் மூர்த்தி? தலைவருக்கு நாம் என்ன தாலியா கட்டிக் கொண்டோம்? இப்போதைக்கு அவர் ராஜா. நடப்பது அவர் ஆட்சி. ஆகவே நாம் அவருடன் இருக்கிறோம். சக்கரம் திரும்பும் ஒரு நாள். தயாநிதிதான் மீண்டும் அதிகாரத்துக்கு வருவார். நாம் அவருடன் நம்மை இணைத்துக் கொள்வோம். ஆள் வித்தியாசப்பட்டாலும் பாரம்பரியம் ஒன்றுதானே?''

''கொள்கை, தத்துவப்

பிரச்னையெல்லாம் வராதா மாமா?''

''ஆகஸ்டு 15 அர்த்த ராத்திரியில் புதைக்கப்பட்ட வார்த்தைகளுக்கெல்லாம் மீண்டும் உயிர் கொடுக்கப் பார்க்கிறாயே! சுதந்திரத்துக்கு முன்னால், அரசியல் ஒரு தொண்டு. மூர்த்தி! நம் தலைமுறையில் அது ஒரு நல்ல தொழில். நேரத்தை வீணாக்காதே! நூலகத்துக்குப் போ! மாலை கோகிலா வீட்டுக்கு வர மறக்காதே...''

**நூ**லகப் பொறுப்பாளர் இளைஞராய் இருந்தார்.

''எனக்குக் கலைக்களஞ்சியம் வேண்டுமே'' என்றான் மூர்த்தி அவரிடம்.

''என்ன?'' என்றார் அந்தப் பொறுப்பாளர், நெற்றியைச் சுருக்கியபடி!

''கலைக்களஞ்சியம். 'ம' வரிசைத் தொகுப்பு வேண்டும்.''

''அப்படி ஒரு மாத நாவல் வருகிறதா என்ன?''

''மாத நாவல் இல்லை. அது ஒரு தொகுப்புப் புத்தகம். அகராதி மாதிரி இருக்கும். அரசாங்க வெளியீடு.''

''அது மாதிரி புத்தகங்கள் எல்லாம் எங்களிடம் வருவதில்லை. எங்களிடம் மாத நாவல், துப்பறியும் நாவல், செக்ஸ் நாவல், சமையல் புத்தகம், கோலப் புத்தகம் கை ரேகை புத்தகம் இந்த மாதிரி வாசகர்கள் விரும்பிப் படிக்கிற புத்தகங்கள்தான் வரும். நீங்கள் அண்ணா சாலையில் இருக்கும் மாவட்ட மத்திய நூலகத்திலோ, அல்லது கன்னிமாராவிலோ தேடிப் பாருங்கள், கிடைக்கும்.''

'தேடுங்கள், கிடைக்கும்' என்று ஏசுவே சொன்னது போல் எண்ணி, அந்த வார்த்தைகளை அசை போட்டுக் கொண்டு, ஒரு ஆட்டோ பிடித்து அண்ணா சாலை நூலகத்துக்கு விரைந்தான் மூர்த்தி. அது மாதிரியான புத்தகங்கள் எல்லாம், 'ரெபரன்ஸ்' பகுதியில் கிடைக்கும் என்றார் ஒரு நூலக ஊழியர். 'ரெபரன்ஸ்' பகுதி என்பது, வீட்டு மருமகள்களால் இடிபட்டுச் சப்பையாய், ஒடுக்காய் ஆன வயோதிகர் இருவர், அல்லது மூவர், ஆராய்ச்சி மாணவர் சிலர் அமர்ந்து வாசிக்கும், குறிப்பெடுக்கும் இடம். நல்ல வேளை, புத்தகம் இருந்தது. புத்தகப் பக்கங்களில் பல இடங்களிலும், போர், அறுவை, உபயோகம் இல்லாத புத்தகம், என் அன்புக் காதலி மீனாவுக்கு என்றெல்லாம் எழுதிய விமர்சனக் குறிப்புகளின் ஊடே மக்காச் சோளத்தைக் கண்டு பிடித்தான் மூர்த்தி.

இதற்கு முத்துச் சோளம் என்றும் பெயர். இதன் தாயகம் அமெரிக்கா. அரேபியா வழி இந்தியாவுக்கு வந்ததால் இது மெக்கா அல்லது மக்காச் சோளம் ஆயிற்று...' எனத் தொடரும் குறிப்பைக் கண்டு ஆச்சர்யத்தில் ஆழ்ந்தான் மூர்த்தி.

மானுடப் பண்பாட்டை வியக்காமல் இருக்க முடியவில்லைதான். அராபியச் சோளம் என்றோ, அமெரிக்கச் சோளம் என்றோ அழையாது மக்காச் சோளம் என்று அழைத்தது ஏன்? தீர்க்கதரிசியும் இறைத் தூதருமான மகமது நபி அவர்களோடு தொடர்புடைய ஊர்ப் பெயரை இட்டு அழைத்து அவரைக் கௌரவப்படுத்திய பெருமை மிகு ஒரு நாட்டின் குடிமகன் நாம் என்ற உணர்வே மூர்த்திக்குப் பெருமை தந்தது. ஒரு வழியாய்க் குறிப்புக்கள் எடுத்து முடிக்கையில் மணி மூன்றானது.

**கோ**கிலா வீட்டுக்கு மூர்த்தி வந்து சேர்கையில் மணி ஆறைத் தொட்டிருந்தது. மாமா இன்னும் அங்கு வந்திருக்கவில்லை.

கோகிலாவின் வீடு அவன் எதிர்பார்த்ததையும் விடப் பெரிதாய் இருந்தது. கேட்டிலிருந்து வீட்டின் வாயிலுக்கு நடந்து வர சரியாக இரண்டரை நிமிடங்கள் பிடித்தன. ஒரு கார் ஓடும் அளவுக்குப் பாதை. இரண்டு புறமும் அடர்ந்து செழித்த தோட்டம். வயதாகி முதுமை பெற்ற மரங்கள், புற்கள், செடிகள். தோட்டம் முடிந்து வீடு வெள்ளைச் சலவைக் கல் மாளிகையோ எனப் பளீரென்று தலைநிமிர்ந்து நின்றது. தலையைச் சுற்றிய தலைப்பாகையும், வரிந்து கட்டிய சாய வேஷ்டியோடும் ஒருவர் வந்து ''யாரைப் பார்க்கணும்?'' என்றார்.

''கோகிலா அம்மாவைப் பார்க்கணும்.''

சில நிமிடங்களில் விநோதினி தோன்றினாள். வீட்டில் இருக்கும் ஆடை போலும் அது. தாத்தா சட்டையில் தோன்றும் பேரக் குழந்தை மாதிரி ஒரு தொள தொள ஆடை. சீப்பு அவள் கூந்தலில் அப்படியே நின்றிருந்தது.

''வாருங்கள்.'' என்று கை குவித்து வரவேற்றாள் விநோதினி.

''அம்மா இல்லையா?'' என்றான் மூர்த்தி, பதிலுக்கு வணங்கிக் கொண்டே.

''ஏன் அம்மாவிடம் மட்டும்தான் பேசுவீர்களா என்ன? என்னிடம் பேசக் கூடாதா?''

''அதுக்கில்லை. சும்மா கேட்டேன்.''

''அது என்ன 'சும்மா' கேட்பது. என் அம்மா முதலில் வந்திருந்தால் என்னைப் பற்றிச் 'சும்மா' கேட்பீர்களா?''

''சேச்சே. என்ன நீங்கள். மாமா உங்கள் அம்மாவைப் பார்க்க வருவதாகவும், என்னை இங்கே வந்து விடும்படியும் சொன்னார். அதனால் கேட்டேன். மாமாவின் கார் வெளியே இல்லை. ஆகவே அவர் இன்னும் வரவில்லை என்று யூகித்தேன். உண்மையைச் சொல்லப் போனால், உங்களை மீண்டும் சந்திக்க நான் மிகவும் விரும்பினேன்.''

அவள் இரும்பி அழகாக அவனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டு,

''என்னை எதற்காகப் பார்க்க விரும்பினீர்கள்?'' என்றாள்.

என்ன பதில் சொல்வது என்று குழம்பினான் மூர்த்தி!

(தொடரும்)



மனநிறைவு என்பது இயற்கையாகவே நம்மிடம் உள்ள செல்வம். ஆடம்பரம் என்பது நாமே தேடிக் கொள்ளும் வறுமை. (சாக்ரடீஸ்) — சா. இரா. மணி.

# ஊசலாடும் வோல்ட்டேஜ்— அச்சமில்லை இதற்கு.



வோல்ட்டேஜ் ஏற்ற இறக்கம் இருந்தால்தான் என்ன— அதைக் கண்டு அஞ்சுவதில்லை ஒரு கெல்வினேட்டர் ரெஃப்ரிஜெரேட்டர். 'பனியை விடக் குளுமையான' கெல்விநேட்டருக்கு எல்லாமே பழகிப்போய் விட்டது.

இதன் ரகசியம் 'மின்சாரத்தை மிச்சப்படுத்தும்' கம்ப்ரெஸ்ஸர், வோல்ட்டேஜ் எவ்வளவு கூடினாலும் குறைந்தாலும், அதைத் தாக்குப் பிடிக்கும் வகையில் உறுதியாக உருவாக்கப்பட்டது. வெளிப்புறத் தட்பவெப்பம் எதுவாக இருந்தாலும் விரைந்து குளிரச் செய்கிறது. வெகு விரைவில் ஐஸ் உண்டாக்குகிறது. மின்சார உபயோகமோ மிகக் குறைவு.

இன்னுமொரு ஆச்சரியம் கெல்விநேட்டரில் உண்டு —அதுவே விசாலமான இடயமைப்பு. அதிக அளவு இடவசதிக்காக, மூலை முடுக்குகள் இல்லாமல் மிகவும் கவனமாக இதன் உட்புறம் வடிவமைக்கப்பட்டது.

வலிமை மிக்கது. எல்லாமே எஃகினாலான இதன் கட்டுமானமும் ஏபிஎஸ் லைனரும் சேர்ந்து, உட்புறத்திற்கும் வெளிப்புறத்திற்கும் கூடுதல் வலு தருகிறது. எனவே நீண்ட காலம் உழைக்கிறது.

நீங்கள் பார்த்துப் பார்த்துத் தேர்ந்தெடுக்க பற்பல மாடல்கள், கண்ணைப் பறிக்கும் வண்ணங்களில்.

எனவே, காலத்தின் சோதனைகளை எல்லாம் தாங்கக்கூடிய ஒரு ரெஃப்ரிஜெரேட்டர் வேண்டுமானால் கெல்விநேட்டர் ரெஃப்ரிஜெரேட்டரை வாங்குங்கள்.

விற்பனை செய்து சேவை செய்வோர்:
எக்ஸ்போ மெஷினரி லிமிடெட்
பிரகதி டவர், 26, ராஜேந்திரா ப்ளேஸ்,
நியூ டெல்லி-110 008.






**கெல்விநேட்டர்**
ரெஃப்ரிஜெரேட்டர்
"மிகவும் விரைவாக குளிர்பதனப்படுத்துவதில் ஈடு இணையற்றது."

உள்ளங் கைகளில் வியர்வை கசகசத்து... உட்கார்ந்திருந்த நிலையிலும் கால்கள் இலேசாக நடுங்கிக் கொண்டிருந்தன. இதயம் இதுவரை அறிந்திராத ஒரு கதியில் பட்டாம்பூச்சி இறகாகப் படபடத்துக் கொண்டிருந்தது... தனது பயத்தின் இவ்வளவு அடையாளங்களும் வெளியே தெரிந்து விடாமல் காக்கும் முயற்சியில் முழு கவனம் செலுத்திக் கொண்டிருந்தாள் நீலா. ஆனால், அரை டஜன் ஜோடிக் கண்கள் அவளையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருக்கையில் எவ்வாறு சம நிலைக்கு அவளால் வர முடியும்? வெட்கமும் அவமானமும் அவளைக் கூனிக் குறுகச் செய்தன.

இந்தப் பெண் பார்க்கும் படலத்தை ஆரம்பம் முதலே எதிர்த்தவள்தான் நீலா. அப்பாவிடம் எடுத்துச் சொல்லி விவாதித்துப் பார்த்து விட்டாள்; அம்மாவிடம் அழுது, அடம்பிடித்துப் பார்த்து விட்டாள்.

"முன் பின் தெரியாத ஒருத்தனைச் சில நிமிஷங்கள் பார்த்துட்டுக் கல்யாணம் பண்ணிக்கிறதா வேண்டாமான்னு எப்படி முடிவு செய்ய முடியும்...? எப்படி அவனுடன் வாழ்நாள் முழுவதையும் கடத்த முடியும்...? யோசிச்சுப் பாருங்க...?" என்று அவள் அப்பா அம்மாவிடம் கேட்டாள்.

"ஏன்! உன் அம்மாவும் நானும் கல்யாணம் பண்ணிக்கலை...? முறைப்படி பெண் பார்த்து, பாக்கு வெத்தலை மாத்திப் பெரியவங்க நிச்சயம் பண்ணின கல்யாணம்தான் எங்க கல்யாணம்... நாங்க இத்தனை வருஷமா சந்தோஷமாத்தானே இருந்துண்டிருக்கோம்! என்ன குறை எங்களுக்கு?" என்றார் அப்பா.

"ஆனால் அப்பா! உங்க காலம் வேறே... அப்போல்லாம் அனேகமா தெரிஞ்ச குடும்பங்கள்லதான் சம்பந்தம் பண்ணிக்குவாங்க; இல்லைன்னா உறவுலயேதான் கல்யாணம் நிச்சயம் பண்ணுவாங்க. அம்மாவோட அப்பாவும் உங்க அப்பாவும் நெருங்கின நண்பர்கள்தானே...? ஆனா இப்ப நான்... முழுக்க முழுக்க அன்னியமான ஒரு குடும்பத்தோட என்னை ஐக்கியம் பண்ணிக்கணும். அப்படி பண்ணிக்கிற முடிவையும் சில நிமிஷத்துக்குள்ளே எடுக்கணும்... இது எனக்குச் சரியாப்படலை..."

நீலாவின் அப்பாவுக்கு அவள் உணர்ச்சிகள் புரிந்தன. ஆனால் அவருக்கு வேறு வழி தெரியவில்லை. 'என் பெண்ணும் உங்கள் பிள்ளையும் கொஞ்ச நாள் பழகிப் பார்த்துட்டுப் பிடிச்சிருந்தா கல்யாணம் பண்ணிக்கட்டுமே' என்று பிள்ளையைப் பெற்றவர்களிடம் அவர் போய்க் கேட்க முடியுமா என்ன...! மேலும் அவர் பொறுப்பு நீலாவுடன் முடிந்து விடவில்லை... அதனால் அவர் நீலாவிடம் கண்டிப்புடன் கூறி விட்டார்:

"இதோ பாரும்மா! உனக்குப் பின்னால் நாலு தங்கைகள் இருக்கும் போது நீ இந்த மாதிரி முற்போக்குப் பேச்சு பேசினியானா உங்க யாருக்குமே கல்யாணம் ஆகாது; என் பொறுப்பு முடிஞ்சு எனக்கு விடியவும் விடியாது!"

சுருங்கிச் சுருண்டு போனாள் நீலா.

இப்போது 'பெண் பார்க்கப்பட்டுக் கொண்டிருந்தாள். 'அவன்' எங்கே உட்கார்ந்திருக்கிறான் என்பதை உள்ளுணர்வு அவளுக்குச் சொல்லிற்று. 'அவன்' தன்னைப் பார்வையால் அளந்து கொண்டிருப்பதையும் உணர முடிந்தது. 'அவன் பெயர் என்ன...? ஆங்... ஜகன்னாதன்... அவன் யார்? எப்படிப்பட்டவன்? அவனுடன் என் வாழ்நாள் முழுவதையும் எப்படிக் கழிப்பது?'

யோசித்தபடி மெள்ள நிமிர்ந்து, ஜகன்னாதன் உட்கார்ந்திருந்த திசையில் பார்த்தாள் நீலா. அடுத்த கணமே முகத்தில் அறையப்பட்டது போன்ற அதிர்ச்சியுடன் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

'ஐயோ! நிச்சயமாக இவனைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள முடியாது! வறுத்த காப்பிக் கொட்டை நிறத்தில், சற்றே கனமான உதடுகளுடன் இருந்தான் அவன். அலசிப் பார்த்தால் கூட அவனிடம் துளி அழகு தென்படாது என்று தோன்றியது.

ஒரு கண நேரத்துக்கு நீலாவுக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டது: 'அவன் கண்கள்... அவற்றில் அறிவுச் சுடர் மின்னியதோ? முகத்தில் கறுமையை மீறிய களை இருந்ததோ... ஐயோ! திரும்பவும் அவனை எப்படி நிமிர்ந்து பார்ப்பது? இல்லை! இல்லை! அவன் நிச்சயமாக விகாரமாய்த்தான் இருக்கிறான். அவனை ஒருநாளும் கல்யாணம் செய்து கொள்ள முடியாது.

நீலா தன் முடிவை வெளியிட்டபோது வீடு இரண்டுபட்டது.

"பொண்ணா பொறந்துட்டு உனக்கு இவ்வளவு அகங்காரம் கூடாது நீலா" — இது அம்மா.

"அதுக்காக உனக்குன்னு மன்மதனையா கொண்டு வந்து நிறுத்த முடியும்! அழகில்லைங்கறதுக்காக வேண்டாம்ங்கறதா! அவனுக்கு மூவாயிரம் ரூபா சம்பளத்துல கௌரவமான வேலை இருக்கு..." — இது அப்பா.

"நான் அவன் வேலையையா கல்யாணம் பண்ணிக்கப் போறேன்...?" — நீலா அழுதாள்; அடம் பிடித்தாள்... வேறு வழியில்லாமல், அவள் அப்பா 'இந்த சம்பந்தம் எங்களுக்குச் சரிப்படவில்லை' என்று ஜகன்னாதன் வீட்டாருக்குக் கடிதம் எழுதிப் போட்டு விட்டார்.

முன்பின் தெரியாதவனைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளும் அவஸ்தையிலிருந்து

ராதா பத்மநாபன்



# பரிமாற்றம்

தப்பி விட்ட நிம்மதியில் இருந்தாலும் நீலாவைக் குற்ற உணர்வு வருத்தியது. அழகில்லை என்பதைக் காரணம் காட்டி ஒருவனை மறுப்பதா...? ஆனால் அதையே ஓர் ஆண் செய்தால் இந்த உலகம் சும்மாதானே இருக்கிறது' என்று கூடவே சமாதானம் எழுந்தது அவள் மனத்துக்குள். இனிமேல் ஒருபோதும் இதைப் போன்ற பெண் பார்க்கும் படலத்துக்குச் சம்மதிக்கக் கூடாது என்று உறுதிப்பட்டது மனம்.

அன்புள்ள செல்வி நீலா,

உங்கள் ஜாதகத்தையும் புகைப்படத்தையும் திருப்பி அனுப்பியுள்ளேன். நீங்கள் என்னை ஏற்க மறுத்தது ஏன் என்பது நன்றாகவே புரிகிறது. அழகற்ற நான் திருமணம் செய்து கொள்ளப் போவதில்லை என்று முடிவெடுத்து விட்டேன்.

— சுருக்கமாக எழுதியிருந்தான் ஜகன்னாதன். பெண் பார்க்கும் படலம் முடிந்து பதினைந்து நாட்கள் கழித்து வந்த அக் கடிதத்தை அவன் ஏன் அப்பாவுக்கு எழுதாமல் தனக்கு எழுத வேண்டும் என்று இலேசாகக் குழம்பிய நீலா, சீக்கிரமே அதை மறந்தும் போனாள்.

ஆனால், அடுத்த பதினைந்தாவது நாள் மற்றொரு கடிதம் வந்தது. 'நான் எழுதிய முதல் கடிதமும் அத்துடன் இணைத்திருந்த ஜாதகமும் புகைப்படமும் கிடைத்தது குறித்து ஏன் பதில் எழுதவில்லை? ஒருவேளை அவை வந்து சேரவில்லையோ...? அல்லது அளவுக்கு மீறி உரிமை எடுத்துக் கொள்ளும் தவறை நான் செய்து விட்டேனா? அவ்வாறு நீங்கள் நினைத்தால் என்னைத் தயவுசெய்து மன்னித்து இரண்டு வரி பதில் எழுதித் தெரிவித்து விடுங்கள்' என்று எழுதியிருந்தான் ஜகன்னாதன்.

நீலா மிகவும் சங்கடப்பட்டுப் போனாள்...

திரு. ஜகன்னாதன் அவர்களுக்கு,

வணக்கம்.

என் படத்தையும் ஜாதகத்தையும் திருப்பி அனுப்பியதற்கு நன்றி. எனக்கு எந்தவித மனஸ்தாபமும் இல்லை.

இப்படிக்கு,

நீலா.

என்று சுருக்கமாக உடனே பதில் எழுதிப் போட்டாள்.

இது நடந்து இரண்டு வாரங்கள் கழித்து ஜனவரி பதினைந்தாம் தேதியன்று ஜகன்னாதனிடமிருந்து நீலாவுக்கு மற்றொரு தபால் வந்தது. இலேசான வியப்புடன் அதைப் பிரித்தாள்.

'பிறந்தநாள் வாழ்த்துக்கள்!' என்று எழுதி, ஜகன்னாதன் கையெழுத்திட்டிருந்த வாழ்த்து அட்டை!

'இவனுக்கு எப்படி என் பிறந்தநாள் தெரிந்தது...? ஓ! என் ஜாதகத்தில் பார்த்ததை நினைவு வைத்துக் கொண்டு அனுப்பியிருக்கிறான்...' — நீலா நெகிழ்ந்து போனாள். அவள் குடும்பத்தாரே மறந்து போயிருந்த அவள் பிறந்த நாளை ஜகன்னாதன் நினைவு வைத்துக் கொண்டிருந்திருக்கிறான்.... வாழ்த்தை மீண்டும் ஒருமுறை புரட்டிப் பார்த்தாள். முகப்பில் ஐந்து சிவப்புப் பூக்களின் கொத்து — இடுக்கில் பச்சை இலைகள் தலைகாட்டின. ஒரு குழந்தை வரைந்த ஓவியம் போல் வண்ணங்கள் அங்கங்கே நீத்திக் கொண்டு ஒழுங்கின்றி இருந்தாலும் அந்தப் படம் கலையுணர்வோடு வரையப்பட்டிருந்ததை உணர முடிந்தது. உள்ளே, உபசார வார்த்தைகளால் இம்சிக்காமல் 'பிறந்தநாள் வாழ்த்துக்கள்' என்று நேரடியாக விஷயத்தைச் சொல்லியிருந்தான் ஜகன்னாதன். அட்டையின் பின் பக்கத்தைத் திருப்பிப் பார்த்தாள். 'இது ஒரு ஸ்பாஸ்டிக் குழந்தையால் வரையப்பட்ட 'வாழ்த்து அட்டை' என்று ஆரம்பித்து மூளைச் சிதைவால் பாதிக்கப்பட்ட அவ்வகைக் குழந்தைகள் பற்றிய சிறு விளக்கம் இருந்தது. மூளைச் சிதைவால் உடல் இயக்கம் பாதிக்கப்பட்ட குழந்தைகள் தங்கள் அசாத்திய மனோபலத்தினால்தான் இதைப் போன்ற ஓவியத்தை வரைய முடியும். எனவே இது சாதாரண ஓவியம் இல்லை. ஒரு பொக்கிஷத்துக்கு நிகரான கலைப் படைப்பு என்று அச்சிடப்பட்டிருந்தது.

அந்த வாழ்த்து அட்டையை வைத்து விட்டுப் போக மனமின்றி மீண்டும் புரட்டிய போது, ஜகன்னாதனின் முத்து முத்தான, கம்பீரமான கையெழுத்தின் பின்னால் மென்மையும் மனிதாபிமானமும் இருப்பதாகப் பட்டது நீலாவுக்கு.

ஜனவரி இருபதாம் தேதி ஜகன்னாதனுக்கு ஒரு கடிதம் வந்தது:

அன்புள்ள திரு ஜகன்னாதனுக்கு,

நீங்கள் அனுப்பிய வாழ்த்தைப் பத்திரமாக வைத்திருக்கிறேன். அர்த்தமுள்ள அந்த ஓவியத்தைத் தேர்ந்தெடுத்து அனுப்பிய உங்களுக்கு என் மனப்பூர்வமான பாராட்டுக்கள். நன்றி.

ஆமாம்... எப்படி என் பிறந்த நாளை

''ரேடியோ நாடகம் எழுதினவரை 'சரித்திரக் கதை' எழுதச் சொன்னது தப்பாப் போச்சு...!''

''ஏன்...? ''

''கடைசியில், 'வரதட்சணை வாங்காதே'ன்னு, முடிச்சிருக்காரே...!''

— ஆர். வசந்தகுமார்.



நினைவு வைத்துக் கொண்டீர்கள்?

இப்படிக்கு,
நீலா.

இதற்குப் பதிலெழுத ஜகன்னாதன் அதிகம் தாமதிக்கவில்லை.

அன்புள்ள செல்வி நீலா,

வாழ்த்து உங்களுக்குப் பிடித்திருந்தது குறித்து எனக்கு அளவில்லாத மகிழ்ச்சி. ஏனென்றால் உங்களைப் போலவே 'அர்த்தமுள்ள ஓவியமாக'க் கருதித்தான் நான் அதைத் தேர்ந்தெடுத்தேன்.

உங்கள் பிறந்த நாளை எப்படி நினைவு வைத்துக் கொண்டிருந்தேன் என்று கேட்கிறீர்கள்... உண்மையைச் சொல்ல வேண்டுமானால், உங்கள் ஜாதகம் பொருந்தி, போட்டோவும் அனுப்பப்பட்டவுடன் என் மனத்துக்குள் ஒரு சாதகமான தீர்மானத்துக்கு நான் வந்து, என் டைரியில் உங்கள் பிறந்த நாள் தேதியைக் குறித்து வைத்துக் கொண்டேன். அவ்வாறு அவசரப்பட்டு ஒரு தீர்மானத்துக்கு நானே வந்தது தப்புத்தான் என்று இப்போது புரிகிறது. அதற்காக மன்னிப்பு கேட்டுக் கொள்வதுதான் நியாயம். ஆனால் வாழ்த்து அனுப்புவதில் தவறில்லை என்றே நினைக்கிறேன். சரிதானே...?

அன்புடன்,
ஜகன்னாதன்.

இக் கடிதத்தைப் படித்த நீலாவுக்கு யாரோ தன்னை ஓர் உலுக்கு உலுக்கி விட்டது போல் இருந்தது.

அன்புள்ள ஜகன்னாதன்,

அசாத்தியமான தன்னம்பிக்கையுடன் என்னைப் பார்க்க வந்த உங்களை மிகவும் புண்படுத்தி விட்டேன் என்று நினைக்கிறேன். ஒரு பெண்ணின் நிலையில், என் இடத்தில் உங்களை இறுத்தி இதனை நீங்கள் பார்க்க வேண்டும். உங்கள் மனம் புண்படச் செய்ததற்கு மன்னிக்க வேண்டுகிறேன்.

அன்புடன்,
நீலா.

என்று இரவோடு இரவாக எழுதி முதல் தபாலில் சேர்த்தாள் நீலா.

சில தினங்களுக்கு ஜகன்னாதனிடமிருந்து பதில் ஏதுமில்லை. நீலாவுக்கு உள்ளூர உறுத்தலாக இருந்தது — மூன்று வாரங்கள் கழித்து மற்றொரு கடிதம் வரும் வரை.

அன்புள்ள நீலா,

யோசித்துப் பார்த்தேன். இப்படி உபசாரமாக ஒருவருக்கொருவர் மன்னிப்பு கேட்டுக் கொள்வதற்கு இனி அவசியமில்லை என்று நினைக்கிறேன். நல்ல நண்பர்களுக்கிடையே அது தேவையில்லை...

நேற்று அதிகாலை கடற்கரைக்குப் போயிருந்தேன். மீனவர்கள் படகுகளை இழுத்துக் கரை சேர்த்துக் கொண்டிருந்தார்கள். எனக்குத் தகழியின் 'செம்மீன்' நாவல்

நினைவுக்கு வந்தது. அதனை நீ படித்திருக்கிறாயா? தமிழ் மொழிபெயர்ப்பு கிடைக்கிறது. அருமையான நாவல்... உங்கள் வீட்டுக்கு வந்திருந்த போது புத்தக அலமாரியில் எனக்குப் பிடித்த புத்தகங்கள் பல இருந்ததைப் பார்த்தேன். வேர்ட்ஸ்வொர்த், கீட்ஸ், டி.எஸ். எலியட், தமிழில் தி.ஜா.ரா, கல்கி, புதுக் கவிதை நூல்கள் பல... நான் படித்திராத சில புத்தகங்கள் கூட இருந்தன. ஆனால் 'செம்மீன்' இல்லை. எனவே நீ படித்திருக்க மாட்டாய் என்றே நினைக்கிறேன். முடிந்தால் அப் புத்தகத்தை விலை கொடுத்து வாங்கியே படியேன்....

அன்புடன்,

ஜகன்.

பி.கு. ஜகன் என்றுதான் என்னை நண்பர்கள் அழைப்பார்கள்.

ஜகன்னாதனுக்கு எழுதிய அடுத்த கடிதத்தில் நீலா குறிப்பிட்டிருந்தாள்:

'செம்மீன்' வாங்கிப் படிக்க எல்லா முயற்சியும் செய்கிறேன். உங்களிடமிருந்தால் கடன் வாங்கிப் படிக்கத் தயார்.

ஆமாம்... அன்று எங்கள் வீட்டுப் புத்தக அலமாரியை ஆராயத்தான் வந்தீர்களா? உங்களால் எப்படி அமைதியாக, சுற்றுச் சூழலைக் கவனித்து, ரசித்துக் கொள்ள முடிந்தது? எனக்கு ஏகப்பட்ட படபடப்பு!'

'நீலா! எனக்கு உன் பேரில் கொஞ்சம் வருத்தம்தான். நான் ஒருமைக்கு மாறிய பிறகும் நீ மரியாதைப் பன்மையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறாயே!' என்று தனது பதிலைத் தொடங்கி எழுதினான் ஜகன்னாதன். இம்முறை தன் குடும்பத்தாரைப் பற்றியும் அலுவலகப் பணியைப் பற்றியும் விரிவாக வர்ணித்திருந்தான். 'எனக்குச் சகோதரிகள் இல்லாததாலோ என்னவோ பெண் பார்க்கப்படும் பெண்ணின் உணர்வுகளை என்னால் முன்னமே தெரிந்து கொள்ள முடியவில்லை. இப்போது புரிந்து கொண்டேன்.'

'அன்புள்ள ஜகன்,

இலக்கியத்தை ரசிப்பதைப் போல வாழ்க்கையையும் நீ நேசித்து ரசிக்கிறாய் என்று உன்னுடைய கடைசிக் கடிதம் மூலம் புரிந்து கொண்டேன்...'

– ஒருமைக்குத் தாவிப் பதில் எழுதினாள் நீலா.

இரண்டு மூன்று வாரங்களுக்கொரு முறை நிகழ்ந்த கடிதப் பரிமாற்றத்தின் இடைவெளி குறைந்து வாரம் ஒன்றாகி ஐந்து நாட்களுக்கு ஒன்று என்ற நிலையில் ஸ்திரப்பட்டது. அந்தக் கால கட்டத்தில்தான் ஒருநாள் அப்பா நீலாவைத் தனியே அழைத்துப் பேசினார்.

''நீலா... அந்த ஜகன்னாதன் — அதான் உன்னைப் பெண் பார்க்க வந்தானே அவன் ரொம்பப்பிடிவாதக்காரனாஇருக்கான்மா... அவனைப் பண்ணிக்க உனக்குச் சம்மதமான்னு கேட்டுத் திரும்பவும் எழுதியிருக்கான்...''

நீலாவின் முகம் அவளறியாமல் மலர். வதைக் கவனியாமல் மேலே பேசினார் அப்பா.

''...எனக்குத் தெரியும். நீ ஒத்துக்க மாட்டேன்னு... அதனால, உன்னைக் கேட்காமலே நான் அவனுக்கு எழுதிப் போட்டுட்டேன்... இப்ப வேற வரன் பார்க்கலாம்னு...''

பனித்துப் போயிருந்த நீலாவின் கண்களைப் பார்த்து விட்டுப் பேச்சை நிறுத்தினார் அப்பா.

நீலா சட்டென்று உணர்ச்சிகளை மறைக்க முடியாமல், அப்பாவுக்கு முதுகு காட்டி, ஜன்னலைப் பார்த்தாள். ஜகன்னாதனின் கடிதங்களும் அவள் எழுதிய பதில்களும் வரிசைக் கிரமமாக அவள் நினைவுக்கு வந்தன. 'இலக்கியப் பரிமாற்றங்களுக்காக ஆரம்பித்து அந்தக் கடிதத் தொடர்புக்கிடையே, ஜகனும் அவளும் தங்களை அறியாமல் உள்ளங்களையும் பரிமாறிக் கொண்டிருப்பதை உணர்ந்தாள். ஆரம்பக் கடிதங்களில் அகஸ்மாத்தாக அங்கங்கே வெளிப்பட்டது மனப் பரிமாற்றம். கடைசி சில வாரங்களிலோ இதயப் பரிமாற்றத்துக்கு இலக்கியம் வெறும் கருவியாகத்தான் உதவியிருக்கிறது' — ஒரு முடிவுக்கு வந்தவளாக அப்பாவைப் பார்த்துச் சொன்னாள்:

''உடனே என் சம்மதம் தெரிவிச்சு ஜகனுக்கு எழுதுங்கப்பா....''

அப்பா ஸ்தம்பித்துப் போயிருந்தார். ஜன்னல் வழியே பார்த்த போது தபால்காரர் வருவது தெரிந்தது. அவளுக்குப் 'பார்சல்' வந்திருக்கிறது என்றார். கையெழுத்து போட்டுப் பெற்றுக் கொண்டாள். ஜகன்தான் அனுப்பியிருந்தான். பிரித்துப் பார்த்தாள். புத்தகம்! தகழியின் செம்மீன்!



''எங்க ஆபீசுக்கு லஞ்ச ஒழிப்புத்துறை அதிகாரி 'ரெய்டு' செய்ய வந்தப்போ... அவருக்கு லஞ்சத்தைக் கொடுத்து நாங்க சமாளிச்சுட்டோம்; அவர் உங்க ஆபீசுக்கும் வந்தாராமே... என்ன ஆச்சு...?''

''அவர்கிட்டேயும் நாங்க லஞ்சம் வாங்கி அனுப்பிச்சிட்டோம்...!''

— இம்ரான்கான்.

# பொன்னியின் செல்வன்

மணியம்

## அத்தியாயம் 18
## அம்பு பாய்ந்தது!



டைக்கரையில் ஒரு மரத்தின் பின்னால் பாதி மறைந்தும் மறையாமலும் நின்ற ஊமை ராணியைப் பூங்குழலி பார்த்தாள். எதிர்பாராத சமயத்தில் எதிர்பாராத இடத்தில் அவளைக் கண்டதினால் பூங்குழலிக்குச் சிறிது திகைப்பு உண்டாயிற்று. அயல் மனிதர்களைப் பார்ப்பதில் ஊமை ராணிக்குப் பிரியம் இல்லை என்பது அவளுக்குத் தெரிந்திருந்தது. படகில் சேந்தன் அமுதன் இருக்கிறானே, அவனைக் கண்டு ஒருவேளை அத்தை ஓடி விடுவாளோ? — என்ற எண்ணம் அவள் மனத்தில் தோன்றிய அந்தக் கணமே அவளுடைய அத்தை ஓடத் தொடங்கி விட்டாள். பூங்குழலி சட்டென்று ஓடத்திலிருந்து ஓடைக் கரையில் குதித்து மேட்டில் ஏறிப் பார்த்தாள். அத்தை சற்றுத் தூரத்தில் அடர்ந்த காட்டுக்குள் மறைந்ததைக் கவனித்தாள்.

இதற்குள் சேந்தன் அமுதனும் கரையில் குதித்து மேட்டில் ஏறிப் பூங்குழலி நின்ற இடத்துக்கு வந்து சேர்ந்தான்.

"பூங்குழலி! பூங்குழலி! சற்று முன் இங்கே நின்றது யார்?" என்று கேட்டான்.

"உனக்குத் தெரியவில்லையா, அமுதா?"

"நிச்சயமாய்ச் சொல்லத் தெரியவில்லை; ஒருவேளை...."

"ஆமாம்; என் அத்தைதான்! நீ செத்துப் போனதாக நினைத்துக் கொண்டிருந்த உன் பெரியம்மாதான்!"

"ஆமாம்; அம்மாவின் ஜாடை கொஞ்சம் இருந்தது போல் தோன்றியது."

"வெறுமனே ஏதாவது சொல்லாதே! சின்ன அத்தைக்கும் பெரிய அத்தைக்கும் உருவ ஒற்றுமை ஒன்றுமில்லை. குணத்தில் ஒற்றுமையும் இல்லை. வீட்டில் கட்டிப் போட்டிருக்கும் பசு எங்கே? காட்டில் எதேச்சையாகத் திரியும் சிங்க ராணி எங்கே?"

"சரி; அப்படியே இருக்கட்டும்.

அமரர் கல்கி

ஏன் உன்னைப் பார்த்ததும் சிங்க ராணி ஓடிப் போய் விட்டாள்?''

பூங்குழலி சிரித்து விட்டு, ''என்னைக் கண்டு ஓடவில்லை; உன்னைப் பார்த்து விட்டுத்தான் ஓடினாள். அயல் மனிதர்களைப் பார்ப்பதற்கு அவளுக்குப் பிரியமிருப்பதில்லை'' என்றாள்.

''நான் அயல் மனிதன் அல்லவே?''

''அத்தைக்கு அது தெரியாதல்லவா? தெரிந்து கொண்டால் உன்னைப் பார்த்து விட்டு ஓட மாட்டாள். ஆனால் தெரிந்து கொள்வதற்கு முன்னால் ரொம்பவும் தயங்குவாள்.''

''பூங்குழலி! இப்போது என்ன செய்யப் போகிறாய்?''

''அத்தையைத் தேடிப் பிடிக்கப் போகிறேன்.''

''நானும் வரட்டுமா?''

''எதற்காக?''

''பெரியம்மாவை நேரில் பார்த்துத் தெரிந்து கொள்வதற்காகத்தான்.''

''எதற்காகப் பெரியம்மாவை நீ தெரிந்து கொள்ள வேண்டும்?''

சேந்தன் அமுதன் தன் பெரியம்மாவின் பழைய வரலாற்றைச் சிறிது பூங்குழலியிடம் அறிந்து கொண்டிருந்தபடியால் அவளைப் பார்க்க ஆவலாயிருந்தான். அத்துடன் பெரியம்மா தன் கட்சியிலிருந்து பூங்குழலியின் மனத்தை மாற்றுவதற்கு உதவி செய்யக் கூடும் என்ற ஆசையும் அவனுக்கு இருந்தது.

''எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன. ஆனால் பெரியம்மாவைத் தெரிந்து கொள்ள விரும்புவதற்குக் காரணம் வேண்டுமா, என்ன?'' என்றான்.

பூங்குழலி சற்று யோசித்து விட்டு, ''சரி, வா! போகலாம். உன்னையும் அழைத்துச் சென்றால் பெரியம்மாவைப் பிடிப்பது சற்றுப் பிரயாசையாக இருக்கும். ஆனாலும் யார் விடுகிறார்கள்? படகை இங்கேயே கட்டிப் போட்டு விட்டுப் போகலாம்!'' என்றாள்.

அவ்விதமே படகை ஒரு தாழம்பூப் புதரின் அடியில் மறைவாக விட்டுக் கட்டியும் போட்டு விட்டு இருவரும் கோடிக்கரைக் காட்டை நோக்கிச் சென்றார்கள்.

நடந்து கொண்டே சேந்தன் அமுதன் ''பூங்குழலி! பெரியம்மா இலங்கைத் தீவிலும் பூதத் தீவிலும் இருக்கிறாள் என்று சொன்னாயல்லவா?'' என்றான்.

''ஆமாம்; சில சமயம் இலங்கைத் தீவிலும் சில சமயம் பூதத் தீவிலும் இருப்பாள்.''

''இங்கே அடிக்கடி வருவதுண்டா?''

''இல்லை; அபூர்வமாகத்தான் வருவாள். நான் வெகு நாள் அவளைப் போய்ப் பார்க்காமலிருந்தால் வருவாள்.''

''இப்போது உன்னைப் பார்க்கத்தான் வந்திருக்கிறாளா?''

''இந்தத் நடவை வேறு காரியமாக வந்திருக்கிறாள் என்று தோன்றுகிறது.''

''வேறு என்ன காரியம்?''

''அவளுடைய சுவீகாரப் புதல்வன் கடலில் முழுகிப் போய் விட்டானா, தப்பிப் பிழைத்துக் கரை சேர்ந்தானா என்று தெரிந்து கொள்வதற்கு வந்திருக்கலாம். இளவரசர் கப்பலேறிப் புறப்பட்ட பிறகு கடலில் சுழிக்காற்று அடித்தது அத்தைக்குத் தெரியும் அல்லவா?''

''அருள்வர்மர் இவளுடைய சுவீகாரப் புதல்வரா? அப்படியானால் பெரியம்மாவின் சொந்த மகன் யார்?''

''அதுதான் எனக்குத் தெரியவில்லை. ஒரு நாள் இல்லா விட்டால் ஒரு நாள் அந்த இரகசியத்தை நான் கண்டுபிடித்துத் தெரிந்து கொள்ளப் போகிறேன்.''

''சொந்த மகன் உயிரோடிருக்கிறானோ, அல்லது இறந்து போய் விட்டானோ?''

''ஆம்; அவன் இறந்து போயிருக்கவுங் கூடும். யாருக்குத் தெரியும்?'' என்று சொன்னாள் பூங்குழலி.



ற்றுப் பொறுத்து, ''அமுதா! அத்தையைப் பார்த்தாயே? உன் அன்னையின் முக ஜாடையாயிருப்பதாகச் சொன்னாய்; வேறு யாருடைய முகமாவது ஞாப

கத்துக்கு வந்ததா?'' என்று கேட்டாள்.

''ஏதோ ஞாபகம் வருவது போலத் தோன்றுகிறது. தெளிவாகத் தெரியவில்லை. மேகத்திரை போட்டு மறைத்தது போலிருக்கிறது.''

''பழுவூர் இளைய ராணியை நீ அடிக்கடி பார்த்ததுண்டா?''

''சில சமயம் பார்த்ததுண்டு. ஆமாம்! நீ சொன்ன பிறகு யாருடைய முக ஜாடை என்று தெரிகிறது. நந்தினி தேவியின் முகத் தோற்றமேதான்! ஆச்சரியமாயிருக்கிறதே! அது எப்படி ஏற்பட்டிருக்கும், பூங்குழலி? நீ எப்படி அந்த ஒற்றுமையைக் கண்டு பிடித்தாய்?''

''அத்தையை அடிக்கடி நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். பழுவூர் இளைய ராணியைச் சில தினங்களுக்கு முன்னாலேதான் இதே கோடிக் கரையில் பார்த்தேன். முகத் தோற்றத்தின் ஒற்றுமை உடனே எனக்குத் தெரிந்து போய் விட்டது...''

''காரணம் என்னவாயிருக்கும்?''

''அதையுந்தான் ஒரு நாள் கண்டு பிடிக்கப் போகிறேன். இன்றைக்கு அத்தையைப் பார்த்ததும் அதைப் பற்றிக் கேட்கலாமென்றிருக்கிறேன்.''

''அத்தைதான் ஊமையாயிற்றே? எப்படி அவளுடன் பேசுவாய்?''

''நீ உன் தாயாரோடு பேசுவதில்லையா, அமுதா!''

''ஜாடையினால் பேசுவேன். பிறந்தது முதல் பழக்கம். அப்படியும் புதிய விஷயம் ஒன்றைப் பற்றிச் சொல்வதாயிருந்தால் கஷ்டந்தான்!''

''பெரிய அத்தையும் நானும் அப்படித்தான் ஜாடையினால் பேசிக் கொள்வோம். ஜாடையினால் பேச முடியாததைச் சித்திரம் எழுதிக் காட்டிக் கொள்வோம்....''

''ஒரே குடும்பத்தில் அக்கா, தங்கை இருவரும் ஊமையாகப் பிறந்தது எவ்வளவு கஷ்டமான விஷயம்? அவர்களைப் பெற்றவர்களுக்கு அதனால் எவ்வளவு துன்பமாயிருந்திருக்கும்?''

''அது மட்டுமல்ல. சிறு வயதில் அக்காவும் தங்கையும் ஓயாமல் சண்டை போட்டுக் கொள்வார்களாம். அதனால்தான் பாட்டனார் பெரிய அத்தையை மட்டும் அழைத்துக் கொண்டு போய்ப் பூதத் தீவில் குடியேறி வசித்து வந்தாராம். பெரிய அத்தையின் பேரில் தாத்தாவுக்கு ரொம்ப ஆசையாம். குழந்தை பிறந்தவுடன் அவளுக்கு ராணியாகும் யோகம் இருக்கிறது என்று யாரோ ஜோசியன் ஒருவன் சொன்னானாம். அதனால் குழந்தை ஊமை என்று தெரிந்ததும் அவருடைய மன வேதனை ரொம்ப அதிகமாயிருந்ததாம்....''



ப்படிப் பேசிக் கொண்டே அவர்கள் காட்டில் புகுந்தார்கள். வெகு நேரம் தேடி அலைந்தும் ஊமை ராணியைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

''அமுதா! நீ என்னுடனிருப்பதனால்தான் அத்தையைக் கண்டு பிடிக்க முடியவில்லை. உன்னைக் கண்டு வேண்டுமென்றே மறைந்து கொள்கிறாள்.''

''என் அதிர்ஷ்டம் அவ்வளவுதான். நான் நினைத்தது எதுவும் நடைபெறுவதில்லை. நான் போகட்டுமா?''

''எப்படிப் போவாய்? இந்தக் காட்டிலிருந்து உன்னை நான்தான் வெளியிலே கொண்டு போய் விட வேண்டும்.''

இந்தச் சமயத்தில் ஓர் அதிசயமான குரலின் ஒலி காட்டுக்குள்ளேயிருந்து வந்தது. அது மனிதக் குரலாகவும் தோன்றவில்லை; மிருகங்களின் குரலாகவும் தோன்றவில்லை.

இரண்டு மூன்று தடவை அந்த ஒலி கேட்டது. அந்த ஒலி வந்த திசையை நோக்கிச் சில மான்கள் பாய்ந்து ஓடின.

பூங்குழலி சற்று நின்று யோசித்தாள். ''அமுதா! சத்தம் செய்யாமல் என்னைத் தொடர்ந்து வா!'' என்று கூறினாள்.

குரல் வந்த திக்கை நோக்கி இருவரும் மெள்ள நடந்து சென்றார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் அதிசயமான காட்சி ஒன்றைக் கண்டார்கள்.




ஊமை ராணி ஒரு மரத்தின் அடிப் பகுதியில் சாய்ந்து நின்று கொண்டிருந்தாள். அவளுடைய கையில் இளந்தளிர்கள் சில வைத்துக் கொண்டிருந்தாள். அவளைச் சுற்றிலும் ஏழெட்டு அழகிய மான்கள் நின்று கொண்டிருந்தன. அவள் கையிலிருந்த தளிர்களைத் தின்பதற்கு அவை போட்டியிட்டன. அவளுடைய தோளின் மீது ஒரு சிறிய மான் குட்டி உட்கார்ந்து தன் சின்னஞ் சிறிய அழகிய கண்களால் அவளுடைய முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தது.

இந்த அபூர்வமான தோற்றத்தைக் கண்டு பூங்குழலியும் அமுதனும் சிறிது நேரம் அசையாமல் நின்றார்கள்.

முதலில் ஊமை ராணியின் தோள் மேலிருந்த மான் குட்டிதான் அவர்களைப் பார்த்தது. பார்த்ததும் தோள் மீதிருந்து துள்ளிக் கீழே குதித்தது.

மற்ற மான்களும் அவர்களைப் பார்த்து விட்டன. எல்லா மான்களும் அவர்கள் நெருங்கி வந்தால் பாய்ந்து ஓடுவதற்கு ஆயத்தமாக நின்றன.

பின்னர் ஊமை ராணியும் அவர்களைப் பார்த்தாள். அவள் தொண்டையிலிருந்து இன்னொரு விசித்திரமான ஒலி வந்தது.

அதைக் கேட்டதும் மான்கள் எல்லாம் துள்ளிப் பாய்ந்து ஓடிப் போய் விட்டன.

''அத்தைக்கு மனிதர்களின் பாஷை மட்டுந்தான் தெரியாது. மிருகங்களின் பாஷை நன்றாய்த் தெரியும்'' என்று பூங்குழலி சொல்லிக் கொண்டே, ஊமை ராணியிடம் சமிக்ஞை செய்தாள்.

ஊமை ராணி இம்முறை ஓடவில்லை. பூங்குழலியைப் பார்த்துப் பதில் சமிக்ஞை செய்தாள்.

பூங்குழலி நெருங்கி வந்ததும் ஊமை ராணி அவளைக் கட்டி அணைத்துக் கொண்டு உச்சி முகந்தாள்.

சேந்தன் அமுதன் சற்றுத் தூரத்திலேயே நின்று கொண்டிருந்தான்.

அத்தையும் மருமகளும் சிறிது



நேரம் மௌன பாஷையில் பேசினார்கள்.

பின்னர் பூங்குழலி அமுதனை அருகில் வரும்படி அழைத்தாள்.

ஊமை ராணி அவனை மேலுங்கீழும் சில தடவை உற்றுப் பார்த்து விட்டு அவன் தலை மீது கைவைத்து ஆசி கூறும் பாவனையில் சிறிது நேரம் இருந்தாள்.

பின்னர் கையை அவன் தலையிலிருந்து எடுத்துவிட்டுப் பூங்குழலியைக் கையை இழுத்துக் கொண்டு போனாள்.

மூன்று பேரும் ஓடைக் கரைக்கு வந்தார்கள்.

ஊமை ராணி அங்கேயே உட்கார்ந்து கொண்டு பூங்குழலிக்குப் போய் வரும்படி சமிக்ஞை காட்டினாள்.

பூங்குழலி "வா! அமுதா! வீட்டுக்குப் போகலாம். அத்தை வர மாட்டாளாம். இங்கே சாப்பாடு கொண்டு வர வேண்டுமாம்" என்றாள்.

இருவரும் கலங்கரை விளக்கை நோக்கிப் போனார்கள்.

"பூங்குழலி! எனக்கு என்ன சொல்கிறாய்?" என்று அமுதன் கேட்டான்.

"உன்னோடு தஞ்சைக்கு வரலாம் என்ற எண்ணம் எனக்கு இருந்தது. அது இப்போது சாத்தியமில்லை. அத்தைக்கு அவருடைய செல்வச் சுவீகாரப் பிள்ளையைப் பார்க்க வேண்டுமாம். ஆகையால்மறுபடியும்நாகைப் பட்டினப் பிரயாணம் எனக்கு இருக்கிறது. நீயும் உடன் வந்தால் அத்தை உடனே ஓடி மறைந்தாலும் மறைந்து விடுவாள். அவளிடம் நான் தெரிந்து கொள்ள வேண்டிய விவரங்களையும் தெரிந்து கொள்ள முடியாது."

சேந்தன் அமுதன் பெருமூச்சு விட்டு, "நான் கொடுத்து வைத்தது அவ்வளவுதான். அப்படியானால், இப்போதே உன்னிடம் விடைபெற்றுக் கொள்கிறேனே!" என்றான்.

"இல்லை, இல்லை! வீட்டுக்கு வந்து சாப்பிட்டு விட்டு உன் மாமன் முதலியவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு போ! இல்லாவிட்டால், என்னிடம் எல்லாரும் சண்டைக்கு வருவார்கள்!"

வழியில் இன்னோர் இடத்தில் ஒரு புதரின் மறைவில் நின்று ஒரு பெண்ணும் ஆணும் பேசிக் கொண்டிருப்பதை அவர்கள் பார்த்தார்கள்.

"ஆகா! அண்ணி ராக்கம்மாள் போலிருக்கிறது. இன்னமும் இரகசியப் பேச்சு முடிந்தபாடாக இல்லை. இப்போது வந்திருப்பவர்கள் யார்? அந்தப் பாண்டிய நாட்டு ஒற்றர்கள் தானா? வேறு யாராவதா?" என்று பூங்குழலி தனக்குத்தானே சொல்லிக்



கொண்டாள்.

ராக்கம்மாள் புதர் மறைவிலிருந்து வெளிப்பட்டு வந்தாள். பூங்குழலியைப் பார்த்ததும் சிறிது திடுக்கிட்டாள். ஆனால் அதை உடனே மறைத்துக் கொண்டு வேகமாக அவர்களண்டை நெருங்கி வந்தாள்.

''பூங்குழலி! இத்தனை நாட்கள் எங்கே தொலைந்து போயிருந்தாய்? உன் அப்பாவும் அண்ணனும் ரொம்ப கவலைப்பட்டுப் போனார்களே!'' என்றாள்.

''எதற்காகக் கவலைப்பட வேண்டும்? நான் வீட்டை விட்டுப் போவது இதுதான் முதல் தடவையா?''

''இந்தத் தடவை உன் அத்தை மகனையும் அழைத்துக் கொண்டு போய் விட்டாயல்லவா? ஒருவருக்கும் சொல்லாமல் நீங்கள் கலியாணம் செய்து கொண்டு விடுவீர்களோ என்று கவலை!''

''அண்ணி! இந்த மாதிரி அசட்டுப் பேச்செல்லாம் என்னிடம் பேச வேண்டாம் என்று எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன்? இன்னொரு தடவை இவ்வாறு பேசினாயோ....?''

''இல்லையடி, பெண்ணே! இல்லை! நீ உன் அத்தை மகனைக் கலியாணம் செய்து கொண்டால் எனக்கு என்ன? அரச குமாரனைக் கலியாணம் செய்து கொண்டால் எனக்கென்ன? இலங்கையிலிருந்து உன் பெரிய அத்தை வந்து உன்னைத் தேடிக் கொண்டிருந்தாள். அவளை நீ பார்த்து விட்டாயா?'' என்றாள்.

''இல்லை, இன்னும் பார்க்கவில்லை!'' என்று சொன்னாள் பூங்குழலி.

வீடு சேர்வதற்குள் சேந்தன் அமுதனிடம் தனியாகப் பேசும் சந்தர்ப்பம் கிடைத்த போது, ''அமுதா! ஜாக்கிரதை! அண்ணி பாண்டிய நர்ட்டுச் சதிகாரர்களோடு சேர்ந்தவள். அவள் உன் வாயைப் பிடுங்கப் பார்ப்பாள். ஒன்றுக்கும் பதில் சொல்லாதே!'' என்றாள்.

''இங்கு நான் இருக்கும் இன்னும் சிறிது நேரமும் ஊமையாகவே இருந்து விடுகிறேன்'' என்றான் சேந்தனமுதன்.



அன்று பிற்பகலில் பூங்குழலி மறுபடியும் நாகைப் பட்டினத்தை நோக்கித் தன் ஓடத்தைச் செலுத்தினாள். படகில் ஊமை ராணி வீற்றிருந்தாள்.

ஊமை ராணியின் அருகில் இருக்கும் போது பூங்குழலி எப்போதும் மன நிம்மதி அடைவது வழக்கம். ஒத்த உணர்ச்சியுள்ள அவர்களுடைய உள்ளங்கள் ஒன்றுக்கொன்று அவ்விதம் அமைதியை அளிப்பதுண்டு.

ஆனால் இம்முறை பூங்குழலியின் மனத்தில் அத்தகைய நிம்மதி ஏற்படவில்லை.

சில நாளைக்கு முன்பு அதே ஓடத்தில் பொன்னியின் செல்வனை உணர்வு இழந்திருந்த நிலையில் அழைத்துப் போனது அவளுக்கு அடிக்கடி நினைவு வந்தது. அந்த இராஜ குமாரனை இன்னொரு இராஜ குமாரியிடம் சேர்ப்பிப்பதற்காகவேதான் அத்தனை கஷ்டத்திற்கு உள்ளானதை எண்ணிய போது அவளுடைய இதயத்தில் 'சுருக்'கென்ற வேதனை ஏற்பட்டது.

சேந்தன் அமுதனை ''ஊருக்குப் போ!'' என்று பிடித்துத் தள்ளியது போல் அனுப்பி விட்டதை எண்ணிய போது அவள் உள்ளம் இரங்கியது.

இந்த எண்ணங்களைத் தவிர, அன்று அவளுடைய தந்தை தியாக விடங்கக் கரையர் செய்த எச்சரிக்கை அடிக்கடி நினைவுக்கு வந்து கொண்டிருந்தது.

''குழந்தாய்! உன்னுடைய போக்குவரத்துகளைக் கொஞ்சம் கட்டுப்படுத்திக் கொண்டால் நன்றாயிருக்கும். யார் யாரோ புதுப் புது மனிதர்கள் இங்கே வந்து கொண்டிருக்கிறார்கள். எதற்காக வருகிறார்கள் என்று தெரியவில்லை. இராஜ்யத்தில் ஏதேதோ சதிகள் நடந்து கொண்டிருக்கின்றன. அவற்றில் நீ அகப்பட்டுக் கொள்ளாதே! நம்முடைய குடும்பம் என்றென்றைக்கும் சோழ குலத்து மன்னர் குடும்பத்துக்குக் கடமைப்பட்டது! இதை மறந்து விடாதே!'' என்று அவளுடைய தந்தை கூறினார்.

தந்தையின் எச்சரிக்கையோடு அண்ணியின் இரகசிய நடவடிக்கை களையும் சேர்த்து எண்ணிய போது பூங்குழலிக்கு என்றுமில்லாத திகில் உண்டாயிற்று. ஒருவேளை அந்தப் புது மனிதர்கள் தன்னைத் தேடிக் கொண்டுதான் வந்திருப்பார்களோ? தன்னைத் தொடர்வதின் மூலம் பொன்னியின் செல்வன் இருக்கு மிடத்தைக் கண்டுபிடிக்க முயல்வார் களோ? தன் மூலமாக அது வெளிப் பட்டால் எவ்வளவு பெரிய குற்றமாக முடியும்? ....

பூங்குழலியின் மனக் கலக்கத்தை அதிகமாக்கக் கூடிய விதமாக ஓடை யின் கரையோரக் காடுகளில் சல சலப்புச் சத்தங்கள் கேட்டுக் கொண் டிருந்தன.

அப்போது காற்றே அடிக்கவில்லை. எட்டுத் திசைகளும் சதி செய்து கொண்டு காற்றைப் பிடித்துத் தடுத்து வைத்திருப்பது போல் இருந்தது.

அப்படியிருக்கும் போது ஓடைக் கரைக் காடுகளில் சலசலப்பு ஏற் படக் காரணம் என்ன?

ஊமை ராணிக்கு இந்தத் தொந் தரவு ஒன்றுமில்லை. அவளுக்குக் காது கேட்காது. ஆகையால் சல சலப்புச் சத்தமும் காதில் விழாது. அவளிடம் அதைப் பற்றி யோசனை கேட்கவும் முடியாது.

ஆனால் ஊமை ராணிக்கு அதிசய மான வேறு சில சக்திகள் உண்டு. கண்ணால் பார்த்தும் காதால் கேட் டும் தெரிந்து கொள்ள முடியாத விஷ யங்களை ஆறாவது புலனின் உதவி யைக் கொண்டு அவள் கண்டு கொள் வாள். அவள் அறியாத அபாயம் ஒன் றும் தன்னை நெருங்க முடியாதல் லவா? .....

இது என்ன? அத்தையும் கவலை யோடு அடிக்கடி ஓடைக் கரையை அண்ணாந்து பார்த்துக் கொண்டு வருகிறாளே? உண்மையிலே அபா யம் ஏதேனும் தொடர்ந்து வரு கிறதோ? ....

அத்தை ஓடைக் கரையை அடிக்கடி பார்ப்பதின் காரணம் சீக்கிரம் வெளி யாகி விட்டது. பூங்குழலியின் கவ லையை அது போக்குவதாயிருந்தது.



## அருள்வாக்கு

எல்லா வசதியும் படைத்த ஒருவர் இருக்கிறார். அவருக்கு நல்ல தேஹாரோக்ய மிருப்பதற்காக 'எக்ஸெர்ஸைஸ்' செய்ய வேண்டியிருக்கிறது. இதைச் செய்வதில் இரண்டு விதங்கள் இருக்கின்றன. ஒன்று, அவர் தேஹாப்பியாஸம் என்று சொல்லப் படும் எக்ஸெர்ஸைஸ்கள் பண்ணலாம் — தண்டால் எடுக்கலாம், ஸர்வாங்காஸனம் போடலாம். அல்லது ஸகல அவயவங்களுக் கும் நன்றாக வேலை கொடுக்கும் விதத்தில் ஓடி ஆடி, வெட்டி, கொத்தி ஏதாவது பண்ணலாம். இப்படி இரண்டாவது விதத் தில் அவர் ஓடி ஆடிப் பண்ணுகிறாரென் றால், அப்போது மற்றவர்களுக்கு ப்ரயோ ஜனமாகப் பழத் தோட்டம் போடுவது, அதற்காக வெட்டுவது, கொத்துவது, ஜலம் இழுத்து வந்து கொட்டுவது என்று பண்ணு வதே ச்லாக்யமாகும். இவருக்குப் பண வஸதி, ஆள் வஸதி எல்லா வஸதியும் இருக்கிறது; அதனால் இவரே உழைத்துத் தோட்டம் போட்டுப் பயிர் பண்ண வேண்டு மென்றில்லை. இவருக்குப் பழமும் வேண்டு மென்றில்லை. இருந்த போதிலும் இவருக்கு மட்டும் ப்ரயோஜனப்படும்படி தண்டால் போடுவதை விட அல்லது எங்கேயோ நிர்மாநுஷ்யமான காட்டிலே மேட்டிலே போய் எதையோ வெட்டி, கொத்தி முறித் துக் கொண்டிருப்பதை விட, நாலு ஜனங் களுக்கு உதவும்படியான பரோபகாரமாகத் தோட்டப் பணி செய்வதுதானே ச்லாக்யம்? பழம் என்ற பலன் இவருக்கு வேண்டாம். ஆனால் தேஹாரோக்யம் வேண்டும். அதற் காக இவர் செய்வதே பழம் வேண்டிய வேறு யாருக்கோ உதவி பண்ணுகிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

ஓரிடத்தில் ஐந்தாறு மான்கள் ஓடைக் கரைப் புதர்களின் இடையில் தெரிந்தும் தெரியாமலும் நின்று படகை எட்டிப் பார்த்தன! இல்லை; படகைப் பார்க்கவில்லை! ஊமை ராணியைப் பார்த்தன!

ஆகா! மான்களைப் போன்ற அழகான பிராணிகள் உலகில் வேறு எதுவும் இல்லை! மான்களைப் படைத்த கடவுள் எதற்காக மனிதர்களையும் படைத்தாரோ, தெரியவில்லை. சண்டாள மனிதர்கள்! இவ்வளவு அழகான பிராணிகளை வேட்டையாடிக் கொல்லுகிறவர்களும் இருக்கிறார்கள் அல்லவா? ...

மான்களைப் பார்த்து, அவற்றின் அழகை நினைத்து, அதிசயித்த பூங்குழலியின் கரங்கள் துடுப்புப் போடுவதை நிறுத்தின. படகு நின்றது.

ஊமை ராணியின் தொண்டையிலிருந்து ஒரு விசித்திரமான ஒலி கிளம்பிற்று. அது அன்று காலையில் கேட்ட குரல் போல் இல்லை. அதில் திகிலும் எச்சரிக்கையும் கலந்திருந்தன.

அதைக் கேட்ட மான்களும் திகில் அடைந்து திரும்பி ஓடத் தொடங்கின.

அதே கணத்தில் எங்கேயோ மறைவான இடத்திலிருந்து ஓர் அம்பு விர் என்று வந்து ஒரு மானின் மீது தைத்தது.

அம்பு தைத்த மான் சோகம் நிறைந்த ஓலமிட்டது!

ஊமை ராணி படகிலிருந்து கரையில் தாவிக் குதித்துக் காயமடைந்த மானை நோக்கி ஓடினாள்.

அவள் மானின் சமீபத்தை அடைந்த அதே சமயத்தில் நாலா புறத்துப் புதர்களிலும் சலசலப்புச் சத்தம் உண்டாயிற்று. அடுத்த வினாடியில் ஏழெட்டுப் பேர் வந்து அவளைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்களில் பலர் கையில் வேலாயுதங்கள் இருந்தன. சற்றுத் தூரத்தில் அவர்களுக்கு வழிகாட்டி அழைத்து வந்த ராக்கம்மாளும் காணப்பட்டாள்.

ஊமை ராணி தப்பி ஓட முயன்றாள்; முடியவில்லை. தப்பி ஓடுவது இயலாத காரியம் என்று அறிந்ததும் ஊமை ராணி சும்மா நின்று விட்டாள்.

இரண்டு பேர் நெருங்கி வந்து அவளுடைய கைகளைக் கயிற்றினால் பிணைத்துக் கட்டினார்கள்.

இவ்வளவும் பூங்குழலி பார்த்துக் கொண்டிருக்கும் போதே சில வினாடி நேரத்தில் நிகழ்ந்து விட்டன. ஊமை ராணியின் கரங்களைக் கயிற்றினால் கட்டுகிறார்கள் என்பதை அறிந்ததும் பூங்குழலி படகிலிருந்து பாய்ந்து கூச்சலிட்டுக் கொண்டு ஓடி வந்தாள். கையிலிருந்த துடுப்பை ஓங்கிக் கொண்டு வந்தாள்.

ஊமை ராணியைச் சுற்றி நின்றவர்களில் ஐந்தாறு பேர் பூங்குழலியை நோக்கி ஓடி வந்தார்கள். அவளைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய்ப் படகில் தூக்கிப் போட்டுக் கயிற்றினால் இறுக்கிக் கட்டி விட்டார்கள்.

பிறகு திரும்பிச் சென்றார்கள். அவர்களுடன் சாவதானமாக வந்த ஊமை ராணியையும் அழைத்துக் கொண்டு சில விநாடி நேரத்தில் மறைந்து விட்டார்கள்.

(தொடரும்)



தலைவர்: ஜனவரி இருபத்திரண்டாம் நாள் இரவு பத்து பத்துக்குத்தான் இந்தக் குளிர் ஜுரம் ஆரம்பிச்சுதுன்னு எப்படிக் கண்டுபிடிச்சீங்க?

டாக்டர்: அப்போதானே உங்க தோல்வியை ரேடியோவில் சொன்னாங்க!

— ஐயாறு ஐந்தாமரை.

# பாம்பே டையிங்

வாங்குவீர் — சேமிப்பீர்

## தள்ளுபடி விற்பனை

எல்லா வகையான பாம்பே டையிங் துணிரகங்களுக்கும்

# 15% தள்ளுபடி

பாலியெஸ்டர் ஷர்ட்டிங்குகள், பாலியெஸ்டர் மற்றும் பாலி யெஸ்டர் வுல் ப்ளெண்டெட் சூட்டிங்குகளுக்கும்

பாலியெஸ்டர் மற்றும் காட்டன் சேலைகள், டிரெஸ் மெட்டீரியல் கள், ரூபியா, கேம்ப்ரிக், லாண் இவைகளுக்கும்

பாலியெஸ்டர் மற்றும் காட்டன் விரிப்புகள், டவல்கள், ஃபர்னி ஷிங்குகள், ப்ளாங்கெட்டுகள் மற்றும் க்வில்ட்களுக்கும்

**விவால்டி** ரெடிமேட் ஷர்ட்டுகள் மற்றும் டீ-ஷர்ட்டுகளுக்கு (இவை தமிழ்நாடு, கேரளா மற்றும் பாண்டிச்சேரியில் உள்ள குறிப்பிட்ட ஷோரூம் களில் மட்டும்)

15% தள்ளுபடி எல்லா வகையான பாம்பே டையிங் துணி ரகங்களுக்கும்.

தமிழ்நாடு, கேரளா மற்றும் பாண்டிச்சேரியில் உள்ள 110க்கும் மேற்பட்ட ஷோரூம்களிலும் குறிப்பிட்ட அங்கீகாரம் பெற்ற டீலர்களிடமும் இச்சிறப்புச் சலுகை கால வரம்புக்கு உட்பட்டது.

## ஸ்பெஷல் போனஸ் சலுகை

# 50% தள்ளுபடி

—மேற்கண்ட தள்ளுபடி விற்பனை காலத்தில் ரூ. 300/- மதிப்புள்ள பாம்பே டையிங் துணிரகங்கள் வாங்கினால், 50% ஸ்பெஷல் போனஸ் தள்ளுபடியில் ஒரு ஏற்றுமதி ரக பாலியெஸ்டர் காட்டன் (58/42) பெட்ஷீட்செட்** கிடைக்கும்.

(டிசம்பர் 15லிருந்து)

* இந்த ஸ்பெஷல் போனஸ் சலுகை, ஸ்டாக் தீரும்வரை தமிழ்நாடு, கேரளா மற்றும் பாண்டிச்சேரியில் மட்டுமே.

** க்வாலிட்டி நம்பர் : 7394 அல்லது 7396 ஒரு பெட்ஷீட் அளவு 137 செ.மீ × 229 செ.மீ.
ஒரு தலையணை உறை அளவு : 66 செ.மீ. × 41 செ.மீ.

Scheme Organised and Sponsored by:
விநியோகஸ்தர்கள் சிவ்ராம்ஸ் அஸோஸியேட்ஸ்/சிவ்சேல்ஸ், கோவை 11 - சென்னை 17. Bankers: The Federal Bank Ltd.

# பாம்பே டையிங் பாம்பே டையிங்

BA/SAC/SSG/ADVT

# கைக்குட்டைக் கனவுகள்

மனத்தை என்னமோ பிசைந்தது. இப்படி முகம் திரும்பாமல் கண்டு கொள்ளாமல் போகும் அளவுக்கு என்ன நடந்தது? யோசித்து யோசித்துப் புத்தி வலித்தது. ராஜி லெட்ஜரை மூடி வைத்துப் பல்லால் பென்சில் கடித்தாள்.

ஆபீஸ் போகும் அவசரத்தில் ஸ்டாப்பில் கீழே நிற்கிறவளைக் கவனிக்க முடியவில்லையா? இல்லை, பார்த்தும் பார்க்காத மாதிரி போனானா? கணேஷ் கோபம் வந்தால் இப்படிப் போவான். ஆனால், இப்போது என்ன கோபம்? எதற்காக?

ஜன்னல் வழியாய்க் காற்று சர்ரென்று வீசிற்று. இப்போது கிளம்பலாமா? நேராய்க் கணேஷ் ஆபீஸுக்குப் போய்க் கணேஷைப் பார்த்தால் போதும். ''என்னாச்சுப்பா? நெஜமா நீ என்னைக் கவனிக்கலையா? கோபமா? ...ஏம்ப்பா?'' என்று கேட்டால் கணேஷ் பழைய மாதிரி ஆகி விடுவான். போகலாமா... போகலாமா?

ஏதோ உந்தித் தள்ள ராஜி ஹேண்ட்—பாக்கை எடுத்துக் கொண்டு எழுந்தாள். மானேஜரிடம் தலைவலி என்று பொய் சொல்லி முழு நாளுக்கும் லீவு எழுதிக் கொடுத்து வெளியே வந்தாள்.

பஸ் ஏறி உட்கார்ந்த போது மனம் முழுக்க கணேஷ். போய் ரிஸப்ஷனில் கூப்பிட வேண்டும். ''என்ன ராஜி?'' என்று கேட்டால் முகத்தை உர்ரென்று வைத்துக் கொண்டு, ''பேசணும்'' என்று சொல்ல வேண்டும். வெளியே வந்து, எப்போதும் போகிற ஃபாமிலி ரூம் போய், கதவைச் சாத்தி ''ஏன் கணேஷ்...? என்ன வெறுப்பு?'' என்று கேட்க வேண்டும். கணேஷ் நெகிழ்வான். ''இதுக்கா இவ்ளோ தூரம் வந்தே... எனக்காகவா?'' என்பான்... கோபம் இருந்தால் இளகிப் போகும்.

''கணேஷா மேடம்...? ரிடையரிங் ரூம்ல சந்தியாவோட ஏதோ பேசிட்டிருக்கார். இப்டி ரைட்ல போங்க.'' ஆஃபீஸ் கிளார்க் வழி காட்டினார்.

வலது பக்கமாய்த் திரும்பி, நேராக நடந்தாள். 'ரிடையரிங் ரூம்' என்று கொட்டையாய் எழுதியிருந்தது. நாற்காலி நாற்காலியாய் அறை முழுக்கக் கிடந்தது.

ராஜி உள்ளே நுழைந்து ஒரு நிமிஷம் சுற்றி வரக் கணேஷைத் தேடினாள். ஓரமாய் உட்கார்ந்திருந்தான். பக்கத்து நாற்காலியில் சந்தியா ஒட்டின மாதிரி உட்கார்ந்திருந்தாள். இருவர் முகத்திலும் வெளிச்சம் இருந்தது.

ராஜிக்குள் ஏதோ நெருடிற்று. 'நல்ல ஸ்நேகிதி — நல்ல பெண்' என்று சந்தியாவைப் பற்றி கணேஷ் சொல்லியிருக்கிறான். அதற்காக இப்படியா...? பக்கத்துப் பக்கத்து நாற்காலியில் உட்கார வேண்டுமா? தள்ளி உட்கார்ந்தால், எதிர்த்தாற் போல் உட்கார்ந்தால் பேச முடியாதா?

''ஏய்... ராஜி... வா வா.. என்ன திடீர்னு?'' கணேஷ் எழுந்து வந்தான். முகம் ஆர்வமாய் ஏதோ தேடியது. இந்த ஆர்வம் பொய்யோ? பார்த்து விட்டாளே... என்று மனசுக்குள் துடித்து, முகம் காட்டுகிற செயற்கையோ?

''திஸ் இஸ் சந்தியா, ராஜி... சந்தியா — இவங்கதான் ராஜி...''

''ஹலோ!''

''ஹலோ!''

ராஜி தீர்க்கமாய்ச் சந்தியாவைப் பார்த்தாள். நன்றாகத்தான் இருக்கிறாள். கண்கள் இரண்டும் எதையோ தேடுகின்றன. உடம்பில் என்னை விட வாளிப்பு அதிகம். இதனால் என் இடத்தில் இவள் உட்கார்ந்து விட்டாளா... இதனாலா? எனக்குப் படபடப்பு அதிகம். இவளிடம் குறைவு என்று முகத்தின் நிதானம் சொல்கிறது. கணேஷுக்கு இந்த நிதானம் — என்னிடமில்லாத நிதானம் பிடித்திருக்குமோ?

''டீ சாப்பிடுறியா?''

இந்துமதி



''வேணாம்... இந்தப் பக்கம் வந்தேன். அப்படியே...'' பொய். மனசு மறுக்க நாக்கு சொல்கிற பொய்.

''அப்ப... நாம அப்புறம் பேசலாம் கணேஷ். வர்றேன் ராஜி.''

சந்தியா நகர்ந்தது சந்தோஷமாய் இருந்தது. ராஜி அவள் வெளியே போகிற வரைக்கும் கண் இமைக்காமல் பார்த்தாள்.

''ஏய்... என்னாச்சு? திடீர்ப் பிரவேசம். இதுல பொய் வேறே! 'இந்தப் பக்கம் வந்தேன். அப்படியே'ன்னு இழுப்பு வேற...?''

''வந்தது நல்லதாப் போச்சு. நீ ஃப்ராடுங்கிறதைப் புரிஞ்சிக்க முடிஞ்சிது.''

கணேஷ் குழப்பமாய்ப் பார்த்து அறையை விட்டு வெளியே அழைத்து வந்தான். தனியாய் ஆபீஸ் காம்பவுண்ட் தாண்டின சின்ன இடத்தில் நிறுத்தினான்.

''நான் ஃப்ராடா? என்ன சொல்றே?''

''தெரியுதே. பக்கத்து நாற்காலியில் உட்கார்ந்து அவள் பேசுறதை என்னால புரிஞ்சுக்க முடியுது.''

''ஏன் தப்பா எடுத்துக்கறே? அவ நல்ல ஃப்ரெண்ட் ராஜி.''

''அது நான் உட்கார வேண்டிய இடம். உன் பக்கத்துல நான்தான். சரி... இன்னிக்கு இவ. நாளைக்கு எல்லாரையும் கூட்டிக்கிட்டு வந்து பக்கத்துல உட்கார வச்சிக்க. நான் தள்ளி நின்னு திருஷ்டி சுத்திப்



ஆபீஸ்லே தூங்கறப்போ
பயங்கரமான
கனவு வருது டாக்டர்..!

என்ன மாதிரி
கனவு?

வேலை பார்க்கிற
மாதிரி...!

— இம்ரான்கான்

போடுறேன்.''

கணேஷ் சட்டென்று அவளது வலது மணிக்கட்டைப் பிடித்தான். ராஜி அவன் பிடிக்குள் திமிறினாள்.

''விடு கணேஷ்... தொடாதே. போய்ச் சந்தியாவின் கையைப் பிடி!''

''நீ கோபப்படுத்துறே ராஜி. இப்படி சொல்றப்பதான் அவள் கையைப் பிடிக்கத் தோணுது.''

''நான் சொல்லித்தான் தோணுதா? இவ்ளோ நேரம் அதானே நடந்துச்சி...?''

''ராஜி... ஸ்டாப் இட் ஐ ஸே.''

''முடியாது. நீ என்னை ஏமாத்திட்டே. நான் ஏமாந்திட்டேன். ஏயப்பா... எம்மேல உயிரா இருக்கானேன்னு ஏமாந்திட்டேன்.''

குரலில் உடைந்து துக்கம் வெளிப்பட்டது. ராஜி கையை வேகமாய் ஆட்டி அவன் பிடியிலிருந்து உதறினாள். நெஞ்சு நெகிழ, கண் கலங்க நின்றாள்.

''இப்ப என்ன செய்யணுங்கிறே?''

''என்ன செய்ய... போ. போய் அவ பக்கத்துலேயே உட்கார்ந்துக்க. அவ கையைக் காலைப் பிடிச்சுக்க. எனக்கென்ன? எக்கேடும் கெட்டு ஒழி.''

கணேஷ் கூர்ந்து முகம் சிவக்கப் பார்த்தான். ''ஒழியுறேன். நீயும் ஒழிஞ்சி போ. கெட் லாஸ்ட்.''

''போறேன். ஜென்மத்துக்கும் என்னைப் பார்க்க வராதே. ராஜி, ராஜின்னு ஃபாமிலி ரூம் பக்கம் வராதே.''

''நான் எங்கே வந்தேன். நீ தான் வந்தே.''

''சரி... நான்தான் வந்தேன். நான்தான் உருகினேன். இனி உருகலே. போதுமா? இனிமே உன் மூச்சுக்காத்தே வேணாம். உன் திசைக்கே பெரிய்ய கும்பிடு. சந்தியா காத்திருப்பா. சீக்கிரம் போ.''

விரலை ஆட்டி ராஜி பேசினாள். கணேஷ் காலால் தரையை உதைத்தான். புருவம் சுருங்க, திரும்பி நடந்தான்.

போவான். நேராகச் சந்தியாவிடம் போய் அவள் பக்கத்து நாற்காலியில் இழைந்து உட்கார்ந்து கொள்வான். பொசுக்கென்று அழுகை வந்தது. ஹேண்ட் பாக்கிற்குள் இருந்த சின்னக் கண்ணாடியில் முகம் பார்த்தாள். ''நான் கறுப்புதான். அத்தனை வாளிப்பு கிடையாதுதான். ஆனால் கணேஷை நான் நேசிக்கிற அளவுக்குச் சந்தியாவால் முடியுமா? என் கணேஷ்... என் கணேஷ் என்று சதா துடிக்கிற மனசு அவளுக்கு இருக்குமா?''

இப்போது எங்கே போக? ஆபீஸ் போக முடியாது. வீடு? வேண்டாம். இத்தனை துக்கத்தில் வீட்டுக்குப் போனால் தாங்க முடியாது. ''என்னாச்சுடி... திமர்னு வந்துட்டே?'' கேள்விக்குப் பதிலாய்க் கோபம் வரும். வேறு எங்கே போக?

ஃபாமிலி ரூம் போகலாமா...? கணேஷோடு சாப்பிட்ட மேஜை, முதன் முதலாய்க் கையில் இட்ட சின்ன முத்தம். அரவணைப்பு... எல்லாவற்றுக்கும் சேர்த்து அழுது முடித்துவிட்டுப் போகலாம். கடைசியாய் எல்லாவற்றுக்கும் நன்றி சொல்லி விடைபெற்றுக் கிளம்பலாம்.

ராஜி வேகமாய் நடந்தாள். மத்தியானம் பன்னிரண்டரைக்கு ஹோட்டலில் கூட்டம் இல்லை. பழகிய சர்வர் சிரித்தான்.

''அவரு வரலையாங்க?''

''ம்ஹூம்.''

ஃபாமிலி ரூம் திறந்து கொடுத்தான். இரண்டு நாற்காலி, ஒரு மேஜை, நானும் கணேஷூம் பேசி, சிரித்து, கோபித்து, காதலித்த நாலு சுவர், இரண்டு நாற்காலி, ஒரு மேஜை.

''என்ன வேணும்ங்க?''

''காப்பி போதும்.''

''அவரு வருவாரா?''

பதில் பேசாமல் ஹீனமாய்ச் சிரித்தாள். அவன் கதவைச் சாத்திவிட்டு நகர்ந்ததும் மேஜையில் கன்னத்தைச் சாய்த்துக் கொண்டாள். கரகரவென்று அழுகை வந்தது. கண்ணை இறுக மூடித் தேம்பினாள். இது முடிவா? கணேஷ் முடிந்து விட்டானா என்னைப் பொறுத்தவரையில்...? கடவுளே... கடவுளே...!

''ம்மா... ஸார் வர்றார். இன்னொரு காப்பி கொண்டாரவா?''

''ஸாரா?''

''வெளியே பைக்கை நிறுத்திட்டிருக்கார். காப்பி கொண்டாரட்டுமா?''

''ம்.''

எங்கே வந்தான் இவன்? எதற்காக? என்னைத் தவிக்க விட்டுவிடவா? இனி என்றைக்கும் நம் உறவு துளிர்க்காது. சந்தியாவைக் கல்யாணம் பண்ணிக்கப் போறேன் என்று சொல்லவா?

கதவு விருட்டென்று விலகிக் கணேஷ் உள்ளே வந்தான்.

''சரியான லூஸ் ராஜி நீ. படபடத்துப் போயிடுறே. நிதானமா யோசிக்க மாட்டேங்கிறே?''

# மனம் கவரும் புத்துணர்ச்சி

எழில் வடிவத்துடன் கூடிய புதிய சந்தன நறுமண பவுடர்

தரத்தில் உயர்ந்த தூய்மையான சந்தன தைலம்
கலந்த பவுடர் இப்பொழுது இனிய நறுமணத்துடன்
புத்துணர்ச்சி அளிப்பதை நீங்களே உணர்வீர்கள்.
புதிய மைசூர் சந்தன டால்கம் பவுடர் நாள்தோறும் உங்கள்
மேனி எழிலுக்கு மெருகேற்றி உங்களை புதுப்பொலிவுடன்
இருக்கச் செய்கிறது.
மைசூர் சந்தன டால்கம் பவுடர் புது மலர்ச்சியுடன் இருக்க
இப்பொழுது புதிய வடிவில் வருகிறது.

புதிய

## மைசூர் சாண்டல் டால்க்

இனிய நறுமணம்—புதிய சுகம்




தயாரிப்பாளர்கள் : மைசூர் காஸ்மெட்டிக்ஸ் லிமிடெட், விற்பனை ஏற்பாடு : மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிமிடெட்.

''இதுல யோசிக்க ஒண்ணுமில்ல.''

''காரணம் கேட்டுட்டுப் பேசு. சும்மா படபடக்காதே. மூதல்ல காரணத்தைச் சொல்ல விடு. நீயே பேசறே பாரு. அதான் தப்பு.''

''இருக்கட்டும். நான் லூஸ்தான். நிதானம் இல்லாதவதான்.''

''சந்தியாகிட்ட என்ன பேசிக்கிட்டிருந்தேன் தெரியுமா? உனக்கு பனாரஸ் பட்டு வாங்கணும். எங்கே, எந்த ரேஞ்ச்ல எடுத்தா நல்லாயிருக்கும்னு கேட்டுக்கிட்டிருந்தேன்.''

''ரொம்ப சந்தோஷம். ஆனா புடவை வாங்கறதைக் கேட்கப் பக்கத்துல உட்கார்ந்தாதான் முடியுமா?''

''அதுல என்ன தப்பு ராஜி?''

''எனக்குப் பிடிக்கலை கணேஷ். நாந்தான் உன் பக்கம் உட்காரணும். அவ உட்கார்றது எனக்குப் பிடிக்கலை. பொசசிவ்னஸ்தான். என்னால் அதை ஜெயிக்க முடியலை கணேஷ். ஐ அக்ஸெப்ட் இட். நான் என் கூட வேலை பார்க்கிற பாஸ்கரோட பக்கத்துல உட்கார்ந்துக்கிட்டிருந்தா உனக்கு எப்படி இருக்கும்... தாங்க முடியுமா?''

''ஏய்... என்ன இது. இதுக்கேன் அழறே?''

''வருது. அழறேன். என்னால தாங்க முடியலை கணேஷ். எனக்கு நீ பெரிசு. காலைல பஸ்ல பார்க்காம போனியேன்னு ஓடி வந்தேன். நீ அவ கூட உட்கார்ந்திருக்கே. எப்படி இருக்கும்?''

கதவு தட்டி சர்வர் உள்ளே வந்து காப்பி தம்ளர்களை வைத்தான். கணேஷைப் பார்த்துச் சிரித்துவிட்டு நகர்ந்தான். கணேஷ் உதட்டுக்குள் சிரிப்பது புரிந்தது. 'சர்வரைப் பார்த்தா? என்னைப் பார்த்தா?'

''காலைல நான் உன்னைப் பார்க்கலை ராஜி. எங்கே நின்னுகிட்டிருந்தே?''

''வேற எங்கே... எங்க ஸ்டாப்ல...?''

''பஸ்ல பயங்கரக் கூட்டம். தலையைத் திருப்ப வழி இல்லே. மிஸ் பண்ணிட்டேன். இதுக்கேன் கோபம்?''

''உனக்குக் கோபமோன்னு நான் வந்தேன்.''

கணேஷ் புடைவைப் பெட்டியை மேஜை மேலே நீட்டினான். ''அழுதுட்டு இங்கே வருவேன்னு தெரியும். மனசு கேக்கல. கோபால கிருஷ்ணன்கிட்டே பைக்கை வாங்கிக்கிட்டு நேரா புடைவைக் கடையில இதை செலக்ட் பண்ணிட்டு இங்கே வர்றேன்.''

ராஜி எழும்பி வந்து அவன் பின்னால் நின்று கழுத்தைக் கட்டிக் கொண்டாள்.

''சொல்லு கணேஷ்... 'ஐ லவ் யூ'ன்னு சொல்லு.''—குரல் தழுதழுத்தது அவளுக்கு.

''அசடே... என் ராஜியாட்டம் வருமா?''

''நிஜம்ம்ம்மா...?''

''நெஜமா... ஐ லவ் யூ ராஜி. ஒன்லி யூ.''

''......

''ஒண்ணு செய்வோம் ராஜி. இந்தப் புடைவையை வெட்டி உனக்கும் எனக்குமா கைக்குட்டை தைச்சுடுவோம். இன்னிக்கு நடந்த சம்பவத்தின் நினைவா... சரிதானே...?''

''இது என்ன லாஜிக்? கைக்குட்டைக்குப் பட்டுத் துணியா? இதுக்கா வாங்கினே?''

''பட்டுத்துணி பெரிசில்லை ராஜி. நீ பெரிசு எனக்கு... புரியுதா?''

திரும்பவும் கண் சிவந்து குரல் இளகக் கரகரத்துப் போய் ராஜி அழுதாள். கண் முன் நூறு நூறாய்க் கைக்குட்டை விரிந்தது. 'சந்தியா மூஞ்சி குரங்கு மூஞ்சி' என்றது. 'ராஜி! நீ செய்தது சிறுபிள்ளைத்தனம்' என்றது.

ஆறுதலாக அவள் கையைப் பற்றிக் கொண்டான் கணேஷ்.







— ஞா. ஞானமுத்து.

# உங்கள் குழந்தைக்கு
# அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அனுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் ஊட்டும் போதும், புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அனுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது; பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்.

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

*சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*




6 மாதங்களிலிருந்து




4 மாதங்களிலிருந்து




6 மாதங்களிலிருந்து

இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008



Nestlé

**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

RK SWAMY/FSL/5112/TAM

# மலையில் பிறந்த கலை; இயற்கை வளர்த்த இசை!



• படப்பிடிப்பின் போது...

**ப**ச்சைப் பசேல் என்று இயற்கைப் பின்னணியுடன் ஒரு மலைப் பகுதி. அதன் எழிலை நாம் ரசித்துக் கொண்டிருக்கும் போதே இங்கு வாழும் மக்களுள் ஒரு பெண் தயக்கமின்றி முன் வந்து, வெகு இயல்பாக நடனமாடுகிறாள். ஒருவேளை நாம் வந்திருப்பதைக் கூட அவள் கவனிக்கவில்லையோ என்னமோ, சிறிதும் கூச்சப்படவில்லை. தன் இனத்தவரிடையில் ஆடுவதாக எண்ணிக் கொண்டு பாடவும் செய்கிறாள்:

"இந்த ராணி
தர்மபுரி ராஜனுக்கு
வாழ்க்கைப் பட்டேன்"

என்று அவள் பாட,

"ஆமாம்பா
மைத்தாம்பா"

என்று பல குரல்கள் இணைந்து எதிர்ப் பாட்டுப் பாடுகின்றன!

பழங்குடிகளின் இந்த ஆடல் பாடலை ரசித்துக் கொண்டே மேலே செல்கிறோம்.

அங்கு இன்னொரு இனிய பாசம் மிக்க காட்சி! நீண்ட தூளியில் குழந்தை தூங்குகிறது. அதன் பிஞ்சுப் பாதங்கள் தூளிக்கு வெளியே தெரிய, தாய் அதனைத் தாலாட்டுகிறாள்:

"உனக்கு ஒரு
சுக்கு வெல்லமும்
கொப்பறைத் தேங்காயும்
கண்ணே...."

பசுமையான மலைச் சரிவு; இதமான சீதோஷ்ண நிலை; நம்மைத் தொட்டுக் கொண்டு செல்லும் வெண்முகில். இவற்றுக்கிடையில் இந்தப் பழங்குடி மக்களின் ஆட்டமும் பாட்டும் நம் இதயத்தை இதமாக வருடி விடுகின்றன.

"எங்கே போக வேண்டும் இந்த இனிய காட்சிகளைக் காண?" என்றால், "கல்வராயன் மலைக்கு" என்பதே பதில். அங்கு போவது அப்படியொன்றும் சுலபமில்லை. போய்த் திரும்பியுள்ள செளதாமினி-ரமணி தம்பதி, காலை ஐந்து மணிக்கே மலையடிவாரத்தை அடைந்து விட்டார்கள். பிறகு ஆறு — ஏழு மணி நேரம் மூச்சிரைக்க நடந்து தான் மலை மீது இவர்கள் வசிக்கும் பகுதியை அடைந்தார்கள்.

எத்தனை பேர் இவர்களைப் போல இத்தனை சிரமப்படத் தயாராயிருப்பார்கள்? அவர்களுக்கு உதவத்தான் ரமணி தம்பதி தாங்கள் கண்ட காட்சிகளை வண்ணத் திரைப்படமாகவும் எடுத்துக் கொண்டு வந்திருக்கிறார்கள். சிறு படங்களின் வரிசையில் ஒரு படம் இது. மூச்சிரைக்க மலை ஏறாமல், தியேட்டரில் அமர்ந்து பார்த்து விடலாம். கல்வராயன் மலைவாசிகளின் இயற்கையோடு இழைந்த, இனிய — எளிய வாழ்க்கையை ரசிக்கலாம். ஏன், பொறாமை கூடப் படலாம்!

தினதந்தின தினதந்தின
தினதந்தின தினநா
தின்னாதி நாதிதன்னா
தினதந்தின தினநா

பச்சை மலை பவள மலை
எங்களது தேசம்
குழந்தை ஏசு வாழுகின்ற
தேசமடி யம்மா!

நல்லதொரு சிலம்பு கட்டி
நான் வளர்த்தேன் சேவல்;
நான் வளர்த்த சேவல்தனை
நஷ்டமிட்டவர் யாரோ...?

இந்தப் பாட்டுக்குப் பையன்கள் குதித்துக் குதித்துக் கோலாட்டம் ஆட, மறையும் சூரியனின் பின்னணியில் இந்தக் காட்சியும் நிழலாகக் கரைந்து போகிறது.

வட ஆற்காடு மாவட்டத்தில் உள்ளது கல்ராயன் மலை. இங்கேயும் கொல்லி மலையிலும் வாழும் மலை — ஆளிகள் எனப்படும் பழங்குடி மக்களின் வாழ்க்கையில் இசையும், நடனமும் பெற்றுள்ள முக்கியத்துவத்தைத்தான் படம் பிடித்திருக்கின்றனர் ரமணி தம்பதி. படத்தின் பெயர்: 'தளர்ந்தது.'

"அதென்ன இப்படி ஒரு தலைப்பைத் தேர்ந்தெடுத்தீர்கள்?" என்று கேட்டதற்கு செளதாமினி சொன்னார்: "கடுமையான உழைப்பு, இயற்கைச் சக்திகளுடன் நிரந்தரப் போராட்டம் என்று அமைந்த வாழ்க்கையின் இடையில் மலை — ஆளிகள் உடலும் மனமும் இறுக்கம் தளர மேற்கொள்ளும் வழி — ஆட்டமும் பாட்டும்தான். அதனால் தான் தளர்ந்தது என்று பெயர் சூட்டினோம்."

"மலைவாசிகளின் இந்த ஆட்டம் பாட்டுக்கிடையில் ஏசு எங்கிருந்து, எப்படி வந்து சேர்ந்தார்?"

"குழந்தை ஏசு வாழுகின்ற தேசமடி யம்மா' என்னும் வரியைத்தானே குறிப்பிடுகிறீர்கள்? அக்கம் பக்கத்தில் உள்ள கிறிஸ்துவ மிஷனரி பள்ளிகளில் மலை — ஆளிச் சிறுவர்கள் படிப்பதால் ஏற்பட்ட பாதிப்பு அது. முருகனானால் என்ன? ஏசுவானால் என்ன? இந்த இயற்கை எழிலிலும் மலை — ஆளிகளின் கபடமற்ற உள்ளத்திலும் தெய்வம் வாழ்வது நிச்சயம்."

"இந்த மலை — ஆளிகள் என்ன, கேரளத்திலிருந்து வந்தவர்களா?"

"இல்லை இல்லை! மலையில் குடியேறிய மக்கள் 'மலை — ஆளிகள்'; அவ்வளவுதான். இவர்களை இந்த மலையைச் சேர்ந்த பூர்வ குடி மக்கள் என்று கூடச் சொல்ல முடியாது. இவர்கள் எப்போது இங்கு வந்து சேர்ந்தார்கள் என்பது இவர்களுக்கே தெரியவில்லை."

"எதற்காக இந்தப் படத்தை எடுத்தீர்கள்? ஆவணக் காப்பகத்தில் வைக்கவா?"

"அதற்கும்தான்; ஆனால் அதற்காக மட்டுமல்ல. ஒரு சமூகத்தின் உயிரோட்டமான வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டிய திருப்தி எங்களுக்குக் கிடைத்திருக்கிறது. அதை விடப் பெரிய பிரதிபலன் எதையும் நாங்கள் எதிர்பார்க்கவில்லை."

செளதாமினி — ரமணி தம்பதி எடுத்துள்ள இந்தப் படம், இதாலியில் நடக்கும் 'சிறு திரைப் படங்கள் விழா'வில் பங்கேற்கச் சென்றிருக்கிறது. அங்கே பரிசு கிடைக்கிறதோ இல்லையோ, இங்கே மிகச் சிறந்த கலைஞராக நம்மால் போற்றப்படும் கிரீஷ் கார்னாடிடம் ஏற்கெனவே பாராட்டைப் பெற்று விட்டது!

— சாருகேசி.

# இன்று இறப்பு விழா

## 14

**வி**வேக்கின் உடம்பில் பில்லியன் கணக்கான ஸெல்களில் அதிர்ச்சி ஸ்லோ மோஷனில் பரவிக் கொண்டிருக்க, ஜெர்கின் கோட் அணிந்த அந்தப் பெண் அவனை ஏறிட்டாள்.

''எஸ்...'' பெரிய கண்களில் லேசாய்க் கலவரம்.

விவேக் இந்தியில் பேசினான்:

''உம் பேரு...?''

''ரேஷ்மா...''

''எங்கிருந்து வர்றே...?''

''லஜ்பத் நகரிலிருந்து.''

''பைக்ல வந்தது நீதானே?''

''ஆமாம்.'' அவள் மையமாய்த் தலையை ஆட்டினாள்.

''ஹோட்டல் காபிடலுக்கு எதிரே இருக்கும் கட்டடத்திற்கு வந்ததும் நீதானே...?''— விவேக் இந்தக் கேள்வியைக் கேட்டதும் அந்த ரேஷ்மா நெற்றியைச் சுருக்கினாள். மெல்லிய குரலில் பேசினாள். குரலில் கொஞ்சம் கோபம்.

''நீங்க சொல்ற இடத்திலிருந்து நான் வரலை... என்கிட்டேயிருந்து உங்களுக்கு என்ன தகவல் வேணும்...?''

விவேக் குழம்பினான். இடது கையின் ஆட் காட்டி விரலால் தாடையைக் கீறிக் கொண்டான்.

'அந்த பைக் பேர்வழியை விட்டு விட்டுத் தவறுதலாக இந்தப் பெண்ணை சேஸ் பண்ணிக் கொண்டு வந்து விட்டோமோ?' யோசனையில் அவளை ஏறிட்டுக் கொண்டே கேட்டான். ''இப்போ ஏர் போர்ட்டுக்கு நீ எதுக்காக வந்திருக்கேன்னு சொல்ல முடியுமா?''

''ஷ்யூர்...! என்னோட அப்பா டில்லி ஃப்ளைட்ல இருக்காரான்னு பார்க்க வந்தேன். கௌண்டரிலேயும் அதைத்தான் விசாரிச்சுக்கிட்டு இருந்தேன்.''

''உங்கப்பா ஃப்ளைட்ல இருக்காரா?''

''ட்ரிப் ஷீட்டைப் பார்த்திட்டிருக்காங்க! எனி ப்ராப்ளம்..?''

விவேக் சொல்ல வாயெடுத்த போது என்கொய்ரி கௌண்டரில் இருந்த இளைஞன் அந்த ரேஷ்மாவிடம் வந்தான்.

''வாட்ஸ் யுர் ஃபாதர்ஸ் நேம்?''

''சந்திரமௌலி.''

''எம். எஸ். சந்திர மௌலி?''

''அவரேதான்.''

''ஃப்ளைட்டில் இருக்கிறார். தகவல் அனுப்பி வரவழைக்க வேண்டுமா?''

''ப்ளீஸ்...'' ரேஷ்மா கொஞ்சலான குரலில் சொல்ல – அந்த இளைஞன் ட்ரிப் ஷீட்டோடு நகர்ந்தான். விவேக் கேட்டான்.

''உன்னோட அப்பா... டெல்லிக்குப் போகிற விஷயம் உனக்குத் தெரியாதா?''

''தெரியாது. காலையிலிருந்தே அம்மாவுக்கும் அப்பாவுக்கும் ஒரு ஃபேமிலி மேட்டரில் மனஸ்தாபம். அப்பா கோபிச்சுட்டு ஆபிஸுக்குப் போனவர் வீட்டுக்கே திரும்பலை. ஃப்ரெண்ட்ஸ் வீடுகளுக்கு டெலிபோன் பண்ணிப் பார்த்ததில் ஒரு ஃப்ரெண்ட் 'அப்பா டெல்லிக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிற' விஷயத்தைச் சொன்னார். அதான் பைக்கை விரட்டிக்கிட்டு வந்தேன். கொஞ்சம் அதிகமான வேகம்தான். ஸாரி...''

அவள் பேசுகிற ஒவ்வொரு வாக்கியமும் உண்மை என்று விவேக்கிற்கு ஸ்பஷ்டமாய்ப் புரிந்தது. ஒரு நீளமான பெருமூச்சை விட்டுத் தோள்களைக் குலுக்கிக் கொண்டான். ரேஷ்மா கேட்டாள். ''எதுக்காக இந்த விசாரணைன்னு இப்பவாவது நான் தெரிஞ்சுக்கலாமா?''

''நோ... ஹார்ம்! தெரிஞ்சுக்கலாம். உன்னோட உயரம். இதே ஜெர்கின் கோட். இதே ஹார்ஸ் ரைடிங் கேப் சகிதம், ஓர் ஆசாமியை காபிடல் ஹோட்டல் பக்கமிருந்து சேஸ் பண்ணினோம். ஜி. டி. ரோட்டின் பிரிவில் கண்ணுக்குச் சிக்கிய அந்த பைக்கைச் சிரத்தையாய் சேஸ் பண்ணியதால் உனக்குப் பின்னாடி வந்து சேர்ந்தோம். ஐ மீன் வீ ஹேவ் மிஸ்ட் இட்...''

ரேஷ்மா குறுக்கிட்டாள்.

''யூ ஆர் கரெக்ட் ஸார். நான் ஜி. டி. ரோட்டை கட் செய்யும் போது என்னைக் கடந்து, நீங்க சொல்கிற அடையாளங்களோடு ஒரு பைக் போனதைப் பார்த்தேன். சரியான வேகம். நூறு கி. மீட்டர் இருக்க

ராஜேஷ்குமார்

லாம்.''

''அந்த பைக் எந்தப் பக்கமாய்ப் போயிற்று?''

''லெப்ட்''- சொன்னவள், ''என்னோட ஃபாதர் லௌன்ஞ்சை நோக்கி வந்துட்டிருக்கார். நான் போலாமா?'' என்று கேட்டாள்.

விவேக் திரும்பிப் பார்த்தான்.

குர்தா மாதிரியான ட்ரஸ்ஸில் — உயரமாய்ப் பொதிந்திருந்த அந்த மனிதர், கையை அசைத்தபடி வந்து கொண்டிருந்தார். அவர் நடையிலும் வேகம்.

''நீ போலாம்.''

விவேக் தலையசைக்க ரேஷ்மா ''டாட்'' என்று கத்திக் கொண்டு லௌன்ஞ்சுக்குள் ஓடினாள். பக்கத்தில் நின்றிருந்த போலீஸ் அதிகாரிகளில் ஒருவர் கேட்டார்.

''நெக்ஸ்ட் மூவ் ஸார்?''

''வாங்க சொல்றேன்...'' விவேக் ஏர்போர்ட்டின் பிரதான வாசலைப் பார்த்துக் கொண்டு நடந்தான்.

இரவின் மையம். நேரம் 12.05. போலீஸ் ஹெட்குவார்ட்டர்ஸின் உள்ளே, கருங்கல் கட்டடத்தின் வால் பகுதியில், அறைக் கதவுகள் சாத்தப்பட்ட ரெட் ரூம். கைகள் தலைக்கு மேல் உயர்த்திக் கட்டப்பட்ட நிலையில் ஒரு சிறிய மரஸ்டூலின் மேல் பிறந்த மேனியாய் உட்கார வைக்கப் பட்டிருந்தான் அந்த வாட்ச்மேன். செங்கல் நிற ரத்தம் கடைவாயிலும், மூக்குத் துவாரங்களிலும் அப்பியிருக்க, தோள் பட்டைகளிலும் முதுகிலும், ரப்பர் தடியின் கைங்கர்யத்தால் உள்ளுக்குள் ரத்தம் ஸ்தம்பித்துப் போய், ஊதா நிற வரிகள் தெரிந்தன.

எதிரே முண்டா பனியன்களோடு, தேகாப்பியாச உடம்புகளைக் காட்டிக் கொண்டு, கைகளில் தடிகளோடு ஐந்து சார்ஜெண்ட்கள் அரை வட்டம் போட்டுக் கொண்டு நின்றார்கள். கண்களில் வேண்டாத பெண்டாட்டியைப் பார்க்கிற குரோதம்.

''லைட்ஸ் ஆன்'' — ஒரு சார்ஜெண்ட் கத்த அறையின் விட்டத்தில் நாற்பத்தைந்து டிகிரி சாய்மானத்தில் வைக்கப்பட்டிருந்த ஃப்ளட் லைட்டுகள் ஏகப்பட்ட வாட்ஸில் உஷ்ணமான வெளிச்சத்தை வாட்ச்மேனின் மேல் கவிழ்த்தன. அவன் கண்கள் கூசி, முகத்தை அப்படியும் இப்படியும் திருப்ப,



ஒரு சார்ஜெண்ட் நெருங்கி லத்தியால் தாடையை உயர்த்தினான். லோக்கல் இந்தியில் கெட்ட வார்த்தைகளைக் கலந்து கொண்டு பேசினான்.

''சொல்லு.. வீணா அடிபட்டுச் சாகாதே! அந்த இந்தியக் கழுகுகள் எங்கே இருக்காங்க?''

''தெ... தெரி.... தெரியாது.....''

''பொய் சொல்லாதே! பம்பாய் போலீஸ் ரொம்பவும் மோசம். நீ இப்போ வாங்கியிருக்கிற அடி அரிச்சுவடிதான். நீ உண்மையைச் சொல்லாமே அடம் பிடிச்சா சகல விதமான சி கி ச் சை க ளை யு ம் காட்டுவாங்க.''

வாட்ச்மேனின் கண்களில் கலவரம் நடந்து கொண்டிருக்கும் போதே, அறைக்கு வெளியே ஜீப் உறுமும் சத்தம் கேட்டது. தொடர்ந்து பூட்ஸின் தாள நடை. அதிகாரிகள் பின்தொடர விவேக் உள்ளே வந்தான். தூக்கம் கெட்ட கண்கள் ரத்தச் சிவப்பில் இருந்தன.

சார்ஜெண்ட்கள் அட்டென்ஷனுக்கு வந்து நெற்றிகளுக்குக் கைகளைக் கொண்டு போனார்கள். விவேக் கேட்டான்.

''என்ன சொல்றான் அந்த வாட்ச்மேன்?''







''அந்த இந்தியக் கழுகுகளைப் பற்றித் தெரியாதுன்னு... சாதிக்கிறான் ஸார்.'' விவேக் அந்த வாட்ச்மேனைப் பார்த்துவிட்டு, சார்ஜெண்ட்களிடம் திரும்பினான்.

''நீங்க எல்லாரும் வெளியே போய் இருங்க. நான் இவனைத் தனியா விசாரிக்கிறேன்.''

எல்லாரும் நகர்ந்தார்கள். விவேக் அறைக் கதவைச் சாத்தித் தாழிட்டு விட்டு, வாட்ச்மேனை நெருங்கினான். ஃப்ளட் லைட்டுகளின் வெளிச்சத்தைக் காணாமல் போக்கி விட்டுக் கேட்டான்.

''உம் பேரென்ன?''

''ஹீ... ஹீ... ஹீராலால்.. ஸார்'' அவன் பயமாய் எச்சில் விழுங்கியதில் தொண்டையில் இருந்த 'ஆதாம் ஆப்பிள்' தவிப்பாய் உயர்ந்து தாழ்ந்தது.

''காபிடல் ஹோட்டலுக்கு எதிரே இருக்கிற இன்சூரன்ஸ் கம்பெனியின் கட்டடம் கட்டப்படுகிற நாளிலிருந்தே நீதான் வாட்ச்மேனா...?''

''ஆ...ஆமா... ஸார்.''

''இந்தியக் கழுகுகளுக்கும் உனக்கும் எப்படிப் பழக்கம்?''

''அ... அவங்க யார்ன்னே எ...எனக்குத் தெரியாது.''

''இதோ பார் ஹீராலால். பொய் சொல்றது ஒரு பெரிய கலை. அந்தக் கலை எல்லார்க்கும் வந்துடாது. இந்தியக் கழுகுகளைப் பத்தி உனக்கு நிச்சயமா தெரியும். ஆனா நீ வெளியே சொல்றதுக்கு பயப்படறே...? நீ பயப்பட வேண்டிய அவசியமே இல்லை. உன்னோட உயிர்க்கு நான் உத்திரவாதம் தர்றேன். ஒரு மந்திரிக்கு என்ன பாதுகாப்பைத் தருவாங்களோ அந்தப் பாதுகாப்புக்கு நான் ஏற்பாடு பண்றேன். சொல்லு, யார் அந்த இந்தியக் கழுகுகள்? அதனோட மூலம் யாரு? பம்பாய்ல எங்கிருந்து இயங்கறாங்க...?'' — விவேக் சொல்லச் சொல்ல ஹீராலால் தலையை ஆட்டினான். நடுங்குகிற குரலில் சொன்னான்.

''எ...எ...எனக்கு அந்தக் கு...கு...கும்பலைப் பத்தி எதுவுமே தெரியாது ஸார். நீங்க சொல்ற 'இந்தியக் கழுகுகள்' பேரும் புதுசா இருக்கு; ரெண்டு நாளைக்கு முன்னாடி ராத்திரி பத்து மணிக்கு மேல ஒருத்தன் பைக்ல வந்தான். கட்டடத்தைக் கட்டறதுக்கான காண்ட்ராக்ட்டை எந்தக் கம்பெனி எடுத்திருக்குன்னு கேட்டான். நான் 'விஜய ராஜா'ன்னு சொன்னேன். அதுக்கு அவன் இவ்வளவு பெரிய கட்டடத்துக்கு ஒரு திருஷ்டிப் பொம்மையை வைக்க வேண்டாமான்னு சிரிச்சுக்கிட்டே கேட்டான். கட்டடத்தைப் பத்தி ஏதேதோ சொல்லிட்டே இருந்தவன் திடீர்னு கையோடு கொண்டு வந்திருந்த ப்ரீப்கேஸைத் திறந்து ரெண்டு நூறு ரூபாய் நோட்டுக் கட்டை எடுத்து என் கையில திணிச்சான். நான் திகைச்சுப் போயி எதுக்குன்னு கேட்டேன். அதுக்கு அவன் சிரிச்சுக்கிட்டே மொட்டை மாடியில



''பொது மக்களுக்கு எங்க ஆபீஸ்ல ஒரு பெரிய வசதி செய்து தந்திருக்கோம்! லஞ்சத்தைக் கடனாச் சொல்லிட்டுப் போகலாம், பதினைந்து சதம் தான் வட்டி...!''

— ஏ. ஆர். வீரராகவன்.



பதவி வகிப்பதைப் பெருமையாக நினைப்பது, கொம்பில் வர்ணம் பூசியுள்ள வண்டி மாடு, மற்ற எல்லா மாடுகளைக் காட்டிலும் தானே அழகாயிருப்பதாக நினைத்துக் கொள்வது போன்றதாகும்!

(மூதறிஞர் இராஜாஜி)

— புத்தனாம்பட்டி மணி.

நான் ரெண்டு ராத்திரி தங்கறதுக்கான வாடகை இது- ஒரு ராத்திரிக்குப் பத்தாயிரம் ரூபா வாடகை. போதுமான்னு கேட்டான்.''

ஹீராலால் தற்காலிகமாய்ப் பேச்சை நிறுத்தி, ரத்தம் பொருக்கு கட்டியிருந்த உதடுகளை நாக்கால் நீவி ஈரப்படுத்திக் கொண்டு தொடர்ந்தான். ''மொட்டை மாடியில் தங்கி என்ன பண்ணப் போறீங்கன்னு கேட்டேன். அதுக்கு அவன் நான் வான சாஸ்திரம் படிச்சவன். நட்சத்திரங்களை ஆராயறதுக்காக டெலஸ்கோப் வெச்சிருக்கேன். மொட்டை மாடியில் ரெண்டு நாள் தங்கி ஆராய்ச்சி பண்ணப் போறேன்னு சொன்னான்.''

''நீ உடனே நம்பிட்டே?'' — விவேக் சிரித்தான்.

''ஆ... ஆமா ஸார்.''

''மேலே சொல்லு.''

''ஒரு திருஷ்டிப் பொம்மையையும் அவனே கொண்டு வந்து கட்டி விட்டான். பணம் கிடைச்சுதேங்கிற காரணத்துக்காக நானும் அவன் சொன்ன எல்லாத்துக்கும் ஒத்துக்கிட்டேன். ஆனா அது இன்னிக்கு இவ்வளவு பெரிய விவகாரமா ஆகும்ன்னு நான் நினைக்கலை ஸார்.''

''வந்த ஆள் எப்படியிருந்தான்?''

''ரெண்டு நாள்தான் அவனைப் பார்த்தேன். ரெண்டு நாளும் முகத்தை மறைக்கிற மாதிரி தொப்பி போட்டு — ஜெர்கின் கோட்டோடு வந்தான். மூஞ்சியில மீசை பெரிசா இருந்தது.''

''பைக் நெம்பர்..?''

''நான் கவனிக்கலை ஸார்.''

''வந்தவன் ரெண்டு ராத்திரியும் மொட்டை மாடியில்தான் தங்கினானா?''

''ஆமா ஸார்.''

விவேக் விசாரணையை முடித்துக் கொண்டு, அறைக் கதவைத் திறந்தபடி வெளியே வந்தான். வெளியே காத்திருந்த ஓர் உயரதிகாரியைக் கூட்டிக் கொண்டு ஜீப்புக்குப் போனான்.

''மிஸ்டர் கிஷோர்!''

''ஸார்...''

''வாட்ச்மேன் ஹீராலாலை இப்பவே வீட்டுக்கு அனுப்பி வெச்சுடுங்க.''

''வீட்டுக்கா...?''

''எஸ்...! இந்தியக் கழுகுகளைப் பற்றி அவனுக்குத் தெரியாது. பணத்துக்கு ஆசைப்பட்டு மொட்டை மாடியை ரெண்டு நாளைக்கு வாடகைக்கு விட்டிருக்கான் அவ்வளவுதான். அவனை அடிச்சுப் பிரயோஜனமில்லை. அவனை வீட்டுக்கு அனுப்பிடுங்க. அடுத்த பன்னிரண்டு மணி நேரத்துல ஒரு இந்தியக் கழுகாவது மாட்டும்.''

''ஸார்... நீங்க சொல்றது புரியலை.''

''புரியும்படியாகவே சொல்றேன். வாட்ச்மேன் ஹீராலாலை அவனோட வீட்டுக்கு அனுப்பிட்டு, அவனை ஒவ்வொரு செகண்டும் வாட்ச் பண்ணணும். போலீஸ் கையில் மாட்டின ஹீராலாலைத் தீர்த்துக் கட்ட இந்தியக் கழுகுகள் எப்படியும் முயற்சி செய்வாங்க. அப்படி முயற்சி செய்யற சமயத்துலதான் நாம அவங்களை அமுக்கப் போறோம். அதுக்கான ஏற்பாடுகளை நீங்க ரகசியமா மேற்கொள்ளணும். ப்ளீஸ்...''

''எஸ்.. ஸார்.''

**ம**றுநாள் காலை பத்து மணி.

அமைச்சர் காமோத்தின் எதிரே உட்கார்ந்திருந்தான் விவேக். பக்கத்தில் கமிஷனர் ஹில். காமோத் கொஞ்சம் சந்தோஷமாய்த் தெரிந்தார். ''முதல் தடவையாக இந்தியக் கழுகுகளின் கொலை முயற்சியைத் தடுத்திருக்கோம். இதற்காக மிஸ்டர் விவேக்கை நாம் பாராட்ட வேண்டும்.''

கமிஷனர் ஹில் அதை ஆமோதிப்பவர் போல் தலையை ஆட்ட விவேக் சொன்னான்.

''அந்த இந்தியக் கழுகுகளுக்கும் நமக்கும் இடையே இருந்த தூரம் இப்போது கணிசமாய்க் குறைந்திருக்கிறது ஸார். அவர்களை இன்னமும் நெருங்குவதற்கு முன்னால் வீரர்களில் பாதி பேர்களையாவது ஒலிம்பியாட்டிற்கு அனுப்பி விட வேண்டும். இந்தியக் கழுகுகளின் மூக்குகளுக்கு வேர்த்து விடாமல் இதைச் செயல்படுத்த வேண்டும்.''

''எப்படி செயல்படுத்தப் போகிறோம்...?''

அமைச்சர் காமோத் கேட்க — விவேக் தன் மனத்தில் அரும்பியிருந்த அந்தத் திட்டத்தைச் சொல்ல ஆரம்பித்தான்.

(தொடரும்)



# அன்பிலே வென்றவன்

அந்தக் கல்யாண மண்டபம் நன்றாக அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. காஞ்சிபுரம் பட்டிலும், சிங்கப்பூர் சில்க்கிலு மாக வண்ண வண்ணமாக உடுத்திக் கொண்டு, தங்கள் பங்குக்கு மேலும் அந்தக் கல்யாண மண்டபத்திற்குக் களையூட்டிக் கொண்டிருந்தனர் மணப்பெண் சுமதியின் கம்பெனித் தோழிகள்.

''அதோ பாருடி எம்.டியும் ஜி.எம்மும் வராங்க...''

''ஆமாம்... மற்ற ஸ்டாஃபும் கூடவே... அட சுரேஷ் கூட வரார்டி...!''

''சுரேஷா...? ஆச்சரியமாயிருக்கே...!''

எம்.டி. எல்லோர் சார்பிலும் பரிசுப் பொட்டலத்தைச் சுமதியிடம் கொடுக்க, இன்முகமும் புன்முறுவலுமாகச் சுமதியின் திருமணம் நல்ல விதமாகவே நடந்து முடிந்தது.

கம்பெனியின் பெரிய வேனில் எல்லோ ரும் திரும்பச் சென்று கொண்டிருந்த சமயம், புவனா சுரேஷைக் கேட்டே விட்டாள்.

''சார் நான் உங்களை எதிர்பார்க்கலே.....?''

'ஏன்?' என்பது போல் அவளை ஏறிட்டுப் பார்த்தான் சுரேஷ். தன்னை அனைவருமே பார்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான். மெல்லத் தனக்குத்தானே புன்னகை செய்து கொண்டு சொன்னான்:

''ஏன் நான் இந்தக் கல்யாணத்திற்கு வந்திருக்கக் கூடாது என்கிறீர்களா?''

''ச்சே..ச்சே... சுமதியை நீங்கள் எந்த அளவுக்கு விரும்பினீர்கள் என்பது எங்கள் எல்லோருக்குமே தெரியும்... அதனால் தான்...'' ராதா இழுத்தாள்.

''உண்மைதான் மேடம்.. நானும் சுமதியும் ஒருவரையொருவர் உயிருக்குயிராக விரும்பினோம்... ஆனால் என்ன செய்வது, சுமதியின் வீட்டில் அவளுக்குப் பலத்த எதிர்ப்பு... என்னையும் விட முடியாமல், வீட்டையும் எதிர்க்க முடியாமல் அவள் தவித்த தவிப்பு எனக்குத்தான் தெரியும்... அதனால்தான் இந்தக் கல்யாணத்திற்கு ஒப்புக் கொள்ளு மாறு நான் அவளை வற்புறுத்தினேன். நாம் ஒருவரை நேசிப்பதின் முக்கிய நோக்கம் நேசிக்கப்படுபவர் நன்றாக இருக்க வேண்டும் என்பதுதானே... எங்கள் காதல் நிறைவேற முடியாமல் போனதற்கு நாங்கள் இருவருமே காரணமல்ல... அப்படியிருக்கும்

போது எங்களிடையே பகைமைக்கோ வெறுப்புக்கோ ஏது இடம்? சொல்லப் போனால் சுமதியின் கல்யாணத்துக்கு வந்து அவளுக்கு ஆசி வழங்குவது என் தார்மீகக் கடமையுங் கூட. சுமதியின் மனத்திலும் தேவையற்ற குற்றவுணர்வு நீங்க இது உதவும்...''

''மார்வலஸ் சார்...!''

மாலதிக்கு இப்பொழுதுதான் கொஞ்சம் புரிந்தது. கம்பெனியில் வேலைக்குச் சேர்ந்த இந்த இரண்டு மாதங்களில், அவளுக்குச் சுரேஷ்—சுமதியின் காதலைப் பற்றித் தெரிந்திருக்க நியாயமில்லைதான். கல்யாண மண்டபத்தில் அவள் தோழிகள் அனைவருமே, சுரேஷ் கல்யாணத்திற்கு வந்ததை நினைத்து ஆச்சரியப்பட்ட சமயம், மாலதிக்கு அவர்களின் பேச்சுதான் அதிசயமாக இருந்தது. இப்போது சுரேஷ் கூறியதைக் கேட்ட பிறகு அவளுக்கு எல்லாம் புரிந்தது.

பொதுவாகவே மாலதிக்கு இந்தக் காதல் விவகாரங்கள் பற்றி அவ்வளவு நல்ல அபிப்பிராயம் கிடையாது. ஆண்கள் தங்கள் தாகத்தைத் தீர்த்துக் கொள்ள, காதல் ஒரு நாடகம் என்பதே அவளது கருத்தாக இருந்தது. இதை உறுதி செய்வது போல் அவளது நெருங்கிய கல்லூரித் தோழி, காதல் என்ற பெயரில் ஒரு கயவனால் ஏமாற்றப்பட்டாள். உயிரையே மாய்த்துக் கொள்ளவிருந்த அவளை மாலதிதான் ஆறுதல் சொல்லி, கல்லூரிப் பேராசிரியையாக்கியிருந்தாள். ஆனால் சுரேஷின் விஷயம் அவளுக்கு அதிசயமாக இருந்தது. சுரேஷின் பேச்சு, அவன் மீது ஒரு மரியாதையை அவளுக்கு ஏற்படுத்தியது.

''ஏய் என்ன ஷாப்பிங்கா...'' தோளில் தட்டிக் கேட்டவளைத் திரும்பிப் பார்த்தாள் மாலதி.

''என்ன...! நான் கனடாவில் இல்லையே...?''

''பரவாயில்லை மாலு... வேலைக்குச் சேர்ந்து நன்றாகப் பேசக் கற்றுக் கொண்டு விட்டாய்...''

''ஆமாம்.. சுமதி நீ கல்யாணம் முடிந்ததும் கனடாவிற்கு அவருடன் சென்று விடப் போவதாகத்தான் கேள்விப்பட்டேன்...''

''கனடா என்ன காஞ்சிபுரமா, நினைத்தவுடன் போய் விட...? விசா கிடைக்க வேண்டாமா....? அது சரி நம் கம்பெனியில் எல்லோரும் எப்படியிருக்காங்க?''

''நல்லாத்தான் இருக்காங்க... அரட்டையும் கேலியுமாக...

''அவர் எப்படியடியிருக்கார்?''

''எவர்...?''

''அவர்தான்... சுரேஷ்...!''

''நல்லாயிருக்கார்...''

''மாலு நீ எனக்கு ஒரு உதவி பண்ணணும். எப்படியாவது அவரைச் சீக்கிரமே கல்யாணம் பண்ணிக்கச் சொல்லணும்...''

''இதை நான் எப்படியடி அவர்கிட்டே சொல்றது?''

''எப்படியாவது... எனக்காக, ப்ளீஸ்! அவர் கல்யாணம் செய்து கொண்டால்தான் எனக்கு நிம்மதி ஏற்படும்...''

''சரி சுமதி முயற்சி செய்கிறேன்...''

''கண்டிப்பாகச் செய் மாலு...''

சுமதியிடம் சொல்லி விட்டாளே தவிர, உண்மையில் சுரேஷிடம் பேச மாலதிக்கு நேரமே வரவில்லை. வலியச் சென்று அவனிடம் பேசவும் அவளுக்கு வெட்கமாக இருந்தது. போதாக்குறைக்கு சுரேஷ் தான் உண்டு தன் வேலை உண்டு என்றிருந்தான். ஓர் ஆடிட் பிரிவிற்கு ஒரு ஸ்டேட்மெண்ட் தயாரிக்க, சில விவரங்களைச் சுரேஷிடம் கேட்க வேண்டியிருந்தது. கேட்ட புள்ளி விவரங்களை உடனே கொடுத்து விட்டான்...

''சார்... வந்து... நான் சுமதியைப் பார்த்தேன்...'' மெதுவாக ஆரம்பித்தாள் மாலு.

''சுமதியா...?''

''ஆமாம் சார்... உங்க சுமதி...''

''நோ மேடம்... சுமதி ஒருவனுக்குச் சொந்தமாகி விட்ட பிறகு, என்னோடு அவளை இணைத்துப் பேசுவது, அவ்வளவு சரியாக எனக்குப் படவில்லை...''

''சாரி சார்! உங்களுக்குப் புரிய வேண்டுமே...''

''சரி பரவாயில்லை மேடம்... அவங்க நல்லாத்தானேயிருக்காங்க...?''

''ஒரு முக்கியமான விஷயத்தை உங்ககிட்டே சொல்லச் சொன்னாங்க சார்... நீங்களும் சீக்கிரமே கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமாம்... அப்பத்தான் அவங்களுக்கும் நிம்மதி ஏற்படுமாம்...''

''.........

''ஏன் சார் பதிலே சொல்ல மாட்டேங்கறீங்க...?''

''இதற்கு நான் என்ன பதிலைச் சொல்வது மேடம். சுமதியின் திருமணத்தில்... அவங்க மகிழ்ச்சியா இருக்க வேண்டும் என்பதில்... என் மனநிலையைத் தெரியப்படுத்திய நான், காதல் தோல்வியால் எனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தையும் மனத் துயரத்தையும் சொல்லிக் கொள்ள வெட்கப்படவில்லை. எனது இந்த ஏமாற்றத்துக்கும் மன வேதனைக்கும் சுமதி காரணமல்ல என்றாலும் வேதனை வேதனைதானே? தெரியாமல் கீழே விழுந்து விடுகிறோம், யார் மீதும் தவறில்லை, என்றாலும், வலி வலிதானே...? இந் நிலையில் இருக்கும் நான், திருமணத்தைப் பத்தி எப்படிச் சிந்திக்க முடியும்...?''

''சரி சார். சுமதி கேட்டால் உங்கள் நிலையை அவளுக்குத் தெரிவித்து விடுகிறேன்...''

''இங்குதான் என்னை நீங்கள் இன்னமும் புரிந்து கொள்ளவில்லை மேடம். என்

**ஒப்பிலியப்பன்**

ஏமாற்றம் என்னோடு போகட்டும். அது சுமதிக்குத் தெரிய வேண்டாமே... அதனால் சுமதி கேட்டால், 'ஆகட்டும் பார்க்கலாம்...' என்று நான் சொன்னதாக, நீங்களே கூறி விடுங்களேன்.. இந்தப் பதில் அவளுக்கு மிகவும் ஆறுதலாக இருக்கும்...''

''சரி சார்...'' — மாலதி எழுந்தாள்.

''ஒன் மினிட் ப்ளீஸ்'' என்றவன், தனது பீரோவைத் திறந்து ஒரு கவரை எடுத்து அவளிடம் நீட்டினான்.

''நீங்க மீண்டும் சுமதியைச் சந்திக்கும் போது மறக்காம இதை அவள்கிட்டே கொடுத்திடுங்க...''

''சரி சார்....''

**"என்ன** மாலூ.... அவர் சரி, ஆகட்டும்னு சொன்னாரா...?''

''இந்தா, இந்தக் கவரையும் உன்னிடம் கொடுக்கச் சொன்னார்...''

கவரை வாங்கிப் பிரித்தாள் சுமதி.

அவள் சுரேஷுக்கு எழுதிய கடிதங்களும் அவன் சுமதிக்கு எழுதியிருந்த ஒரு துண்டுக் கடிதமும் அதில் இருந்தன.

சுரேஷின் கடிதத்தை எடுத்துப் பிரித்துப் படித்தாள்.

திருமதி சுமதி அவர்களுக்கு,

நீங்கள் முன்பு எழுதியிருந்த கடிதங்களை இத்துடன் திருப்பி அனுப்பியுள்ளேன். உங்கள் நினைவாக இக் கடிதங்களை நானே வைத்துக் கொள்ள முதலில் நினைத்தேன், பிறகு இவற்றைக் கிழித்து விட நினைத்தேன். உங்களுக்குத் திருமணமான பிறகு, இவை என்னிடம் இருப்பது பண்பாகாது. நானே இவற்றைக் கிழித்தெறிந்து விட்டாலும்... எப்பொழுதாவது இக் கடிதங்களைப் பற்றி உங்களுக்கு நினைவு வந்தால், உங்கள் மனத்தைச் சங்கடத்துக்குள்ளாக்கும், உங்களுக்கு அப்படியொரு குழப்பம் ஏற்படக் கூடாது என்பதற்காகத்தான் இக் கடிதங்களை உங்களுக்கே திருப்பி அனுப்பியுள்ளேன். என் மீது நீங்கள் வைத்திருக்கும் அன்பிற்கு, இக் கடிதங்கள்தானா சாட்சி சொல்ல வேண்டும்...?

என்றும் உங்கள் நலம் விழையும்,
சுரேஷ்.

சுமதிக்குக் கண் கலங்கி விட்டது.

''சுமதி என்னவாயிற்று உனக்கு...?''

''இந்தா மாலூ... இதை நீயும் படி...''

மாலதி தயக்கத்துடன் சுரேஷின் கடிதத்தைப் படித்தாள்.

சுரேஷ் காதலில் தோற்று விட்டாலும், அன்பில் வெற்றி பெற்று விட்டான். சுரேஷை நினைக்க நினைக்க மாலதிக்குப் பெருமையாக இருந்தது.

## ஸ்ரீ நாராயணதீர்த்தர் ஆராதனை விழா (திருப்பூந்துருத்தி)

இவ்வாண்டு கமிட்டியின் (வெள்ளி விழா ஆண்டு) சிறப்பாக 11.2.89 முதல் 13.2.89 முடிய சத்குருவின் ஆஸ்ரமத்தில் நடைபெறவிருக்கிறது. வி ழா வி ற் கு திரு. இராமமூர்த்தி ஐ. ஏ. எஸ்., தமிழ்நாடு அரசு, தலைமை தாங்கவும், மஹாராஜபுரம் திரு. வி. சந்தானம் அவர்கள் குத்துவிளக்கு ஏற்றி விழாவைத் துவக்கி வைத்து ஸ்வாமிகளின் தரங்கங்களை பாடி இன்னிசை நிகழ்த்துகிறார்கள். முக்கிய விருந்தினராக திரு. எம். கோபாலகிருஷ்ணன், தலைவர் & நிர்வாக இயக்குநர், இந்தியன் வங்கி, வருகை தந்து தரங்க வித்யாசாலை மாணவ, மாணவிகளுக்குப் பரிசுகளை வழங்குகிறார். சிறப்புச் சொற்பொழிவாளர்களாக இசை ஆராய்ச்சியாளர் சென்னை கே. எஸ். மகாதேவன், டாக்டர் எஸ். அகஸ்திய லிங்கம், துணைவேந்தர், தஞ்சாவூர் (தமிழ்ப் பல்கலைக் கழகம்), திரு. டி. என். ராமச்சந்திரன், வழக்குரைஞர், தஞ்சாவூர், ஸ்ரீலஸ்ரீ. மஹாசன்னிதானம் தவத்திரு. குன்றக்குடி அடிகளார் முதலானோர் பங்கு கொள்கின்றனர். 12.2.89 மற்றும் 13.2.89 தேதிகளில் சிறப்பு விருந்தினர்களாக திரு. என். கோபாலஸ்வாமி, நிர்வாக இயக்குநர், டால்மியா சிமெண்ட்ஸ், திரு. வி. ராமஸ்வாமி, மேலாளர், தென்னக ரயில்வே, திருச்சி ஆகியோர் பங்கு கொள்கின்றனர்.

விழாவில் மூன்று நாட்களும் ஸங்கீத கலாநிதி திருமதி டி. கே. பட்டம்மாள், பத்மஸ்ரீ கே. வி. நாராயணஸ்வாமி, திரு. வி. ஆர். கிருஷ்ணன், திரு. ஜி. எஸ். மணி, திருமதி பத்மா நாராயணஸ்வாமி, பொழக்குடி திரு. கணேச அய்யர், வீணை காயத்ரி மற்றும் வயலின் கலைஞர்கள் திரு. எம். சந்திரசேகரன், திருமதி டி. ருக்மிணி, திருவள்ளூர். பார்த்தசாரதி, திரு. நாகை முரளீதரன், திரு. என். வி. சுப்ரமண்யம் மற்றும் மிருதங்க வல்லுநர் கர்மயோகி காரைக்குடி திரு. ஆர். மணி, திருச்சூர். நரேந்திரன், குத்தாலம். திரு. விஸ்வநாத அய்யர், தஞ்சாவூர் திரு. ராமதாஸ், பெங்களூர் டி. ஏ. எஸ். மணி, கடம் பாலக்காடு வி. ஏ. சுந்தரம், கோவை. மோகன்ராம், ஹரிகதை வல்லுநர் பிரும்மஸ்ரீ டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள், திருமதி டி. ஆர். கமலாமூர்த்தி மற்றும் பல இசைக் கலைஞர்கள் பக்கவாத்தியக் கலைஞர்கள் கலந்து கொள்கிறார்கள். விழாவிற்கான ஏற்பாடுகளை காரியதரிசி, திருப்பூந்துருத்தி வி. வெங்கடேசன் மற்றும் உபதலைவர். ஆர். ப்ரதாப்சிங் காடேராவ், தஞ்சை. திரு. ஏ. சுப்ரமண்ய செட்டியார் முதலியவர்கள் கவனித்து வருகிறார்கள். விழாவிற்குத் தாராளமாகப் பொருளுதவி செய்ய வேண்டியும், கீழ்க்கண்ட பொருளாளர் முகவரிக்கு அனுப்புவதுடன் ஸ்வாமிகளின் கைங்கர்யத்தில் எல்லோரும் வந்து கலந்து கொள்ள வேண்டுகிறோம்.

முகவரி:
திரு. எல். பாலசுப்ரமண்யம்,
**1090, பாபண்ணா சந்து,**
**தஞ்சாவூர் — 613 009.**

இங்ஙனம்,
ஸ்ரீ நாராயணதீர்த்த ஸ்வாமிகள் ஆராதனை,
மஹோத்ஸவ கமிட்டியார்,
திருப்பூந்துருத்தி.

# மு.க.ஸ்டாலின்: கலைஞரின் பலமா, பலவீனமா?

* அ. முஸ்தபா, தக்கோலம்.

**? எந்தக் கட்சியுடனும் கூட்டணி இல்லாமல் இத்தனை இடங்களைப் பிடித்த காங்கிரஸ் பற்றி?**

! நம்பிக்கையோடு செயல்பட்டால் ஆட்சியைப் பிடிக்கும் அளவுக்குக் கூட அடுத்த ஐந்தாண்டுகளில் வளர முடியும். ஆனால் அதற்கு மாநிலக் கட்சியின் சுதந்திரத்தில் தில்லி தலையிடாமலிருப்பதோடு உட்கட்சி ஜனநாயகம் அடிமட்டத்திலிருந்து செயல்பட வேண்டும்.

* ஆ. மோகன் குமார், நீடாமங்கலம்.

**? மு. க. ஸ்டாலின் கலைஞரின் பலமா, பலவீனமா?**

! அடக்கத்துடன் இருந்தால் பலம்; அடம் பிடித்தால் பலவீனம்!

* ந. இளங்கோவன், தலைஞாயிறு.

**? பாக்யராஜின் நிலைமை ராஜேந்தருக்கும் ஏற்பட்டு விட்டதே?**

! சாலை விதிகளைக் கடைப்பிடித்து அவரவரும் அவரவர் பாதையில் ஒழுங்காகச் சென்று கொண்டிருந்தால் அனைவருக்குமே நல்லது. லேன் மாறினால் ஆபத்து; மஞ்சள் கோட்டைக் கடந்தால் விபத்து!

* எம். ஏ. பாஷா, கடலூர்.

**? படம் எடுப்பது, கட்சி தொடங்குவது— இக்காலத்தில் எது சுலபம்?**

! இவ்விரண்டையும் விட அறிக்கை விடுவது சுலபம்.

* வி. எஸ். மணி, காரைக்குடி.

**? தில்லியில் கொலை செய்யப்பட்ட நாடகக் கலைஞர் பேராசிரியர் சஃப்தார் ஹாஷ்மி பற்றி...?**

! விஜயவாடாவில் காங்கிரஸ் எம். எல். ஏ. கொலை செய்யப்பட்டதை இத்தனை அமர்க்களப்படுத்துகிறவர்கள், வீதி நாடகக் கலைஞர் சஃப்தார் ஹாஷ்மியைப் பட்டப் பகலில் வீதியிலேயே அடித்துக் கொன்ற காங்கிரஸ் ஆதரவாளர்களைக் கண்டிக்காதது பெருங்குற்றம். ஆனால் ஹாஷ்மியின் மனைவி கையில் குழந்தையுடன் அதே இடத்தில், மூன்று நாட்களுக்குப் பிறகு நாடகத்தைத் தொடர்ந்து நடத்தினார் என்பது சற்றே ஆறுதல்.

* எஸ். ஹரிஹரன், சாத்தனூர்.

**? கலைஞர் கருணாநிதியின் வெற்றிக்கு ஆதாரமான சூழ்நிலை எது?**

! எப்பேர்ப்பட்ட சூழ்நிலையானாலும், ஏற்றத் தாழ்வானாலும் அவரை விட்டுப் பிரியாமல், நகமும் சதையும் போல உடனிருக்கும் தொண்டர் படை தான்; உடன் பிறப்புக்கள்தாம் — வேறென்ன?

* மு. மதிவாணன், அரூர்.

**? 'தனிக் கட்சி தொடங்குவேன்' என்று கூறியிருக்கிறாரே, சோ?**

! 'கட்சி' என்று குறிப்பிட்டதாகத் தெரியவில்லை. தி. மு. க. ஆட்சிக்கு வந்தால் ஓர் 'இயக்கம்' ஆரம்பிப்பது தவிர தமக்கு வேறு வழியில்லை என்று கூறியதாக நினைவு. ஜனநாயக உணர்வுகளை மக்களுக்கு ஊட்டுகிற, ஜனநாயக மரபுகளையும் உரிமைகளையும் மக்களுக்குக் கற்றுத் தருகிற ஓர் இயக்கமாக அது இருக்கும் என்றுதான் என்னைப் போன்ற பலர் அர்த்தம் செய்து கொண்டோம். அவ்வாறெனில் ஏற்கெனவே சி. எஸ்ஸின் இயக்கம், உதயமூர்த்தி இயக்கம் என இரண்டு; இது மூன்றாவது! ஆக, அரசியல் சார்பற்ற ஒரு போதனா இயக்கத்தை நடத்துவதிலே கூட நம்மால் ஒற்றுமை காண முடியவில்லை; ஒன்றுபட்டுச் செயல்பட முடியவில்லை! அரசியல் கட்சிகள் எப்படி எப்படியோ நடந்து கொள்வதில் வியப்பென்ன?

* சாமா, சீர்காழி.

**? தொகுதி மக்கள் தமக்கு வோட்டுப் போடாவிட்டால் கைமா(?) செய்து விடுவதாகவும் குழாய் இணைப்புக்களைப் பிடுங்கி விடுவதாகவும் பி. எச். பாண்டியன் அறிக்கை விட்டது குறித்து?**

**நீங்கள் கேட்டவை — தராசு**

! நல்லவேளை, 700 வோட்டுக்களில் பாண்டியன் ஜெயித்து விட்டார்; தொகுதி மக்கள் தப்பித்தார்கள்!

* எஸ். வேங்கடேசன், கும்பகோணம்.

? ம. பொ. சி. தேர்தல் பிரசாரம் செய்ததற்கு ஆட்சேபம் எழும்பியது குறித்து?

! நியாயமான ஆட்சேபணையே. அவர் செய்தது மாபெரும் தவறுதான். நல்ல வேளை, காங்கிரஸ் தோற்றுப் போயிற்று. இல்லையெனில் இவர் பிரசாரத்தை ஏற்று வென்றவர் மீது 'தேர்தல் செல்லாது' என வழக்குத் தொடரப்பட்டிருக்கும்.

* ஏ. கிரி, கும்பகோணம்.

? பிரேம் நஸீரிடம் உங்களுக்குப் பிடித்த அம்சம் என்ன?

! சத்யனுக்குப் பிறகு அழுத்தமான, ஆழமான நடிப்பை வெளிப்படுத்தியவர் பிரேம் நஸீர். அரசியலில் குதிக்கப் போவதாகச் செய்தி வெளியான போது கவலைப்பட்டேன். நல்லவேளை, பெயரைக் கெடுத்துக் கொள்ளாமல் இருந்தார்.

* வி. ராதாகிருஷ்ணன், திருச்சி — 14.

? கிரிக்கெட் விளையாடாத தெருவே இல்லை என்ற நிலை வந்துவிட்டது... இருந்தும் கிரிக்கெட் பந்தின் விலை அநியாயமாக இருக்கிறதே, ஏன்?

! தேர்தலுக்கு முன்பே இந்த விஷயத்தை 'ஜெ' காதில் போட்டு வைத்திருக்கக் கூடாதா? அதையும் இலவசமாகத் தருவதாக வாக்குறுதி கொடுத்திருப்பாரே! சே! நீர் சுத்த மோசம்!

* பாக்யமுத்து, திருச்சி — 20.

? மனத்தை ஒரு நிலைப்படுத்துதல் என்கிறார்களே, விளக்குங்களேன்?

! பொன்னியின் செல்வனோ, தலையங்கமோ, கலை விமர்சனமோ ஏதோ ஒன்றை எழுத அமரர் கல்கி உட்கார்ந்து விட்டாரென்றால், யானையைக் கொண்டு போய் எதிரே நிறுத்தினாலும் அவருக்குத் தெரியாது! இப்படி ஓர் ஆழ்ந்த லயிப்பை உருவாக்கிக் கொள்ளப் பிராணாயாமம் போன்ற பயிற்சிகள் உதவும். தவிர, நேற்று என்பது முடிந்து போன ஒன்று; நாளை என்பது நம்மால் ஊகிக்க முடியாத ஒன்று; இன்று, இப்போது நடப்பதே முக்கியம்; அதில் முழுக் கவனத்தைச் செலுத்துவோம் என்ற எண்ணத்தை வளர்த்துக் கொள்வதும் உதவும்.

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? சமீபத்தில் உங்களைச் சந்தோஷப்படுத்திய விஷயம்?

! தமிழ்நாட்டில் காங்கிரஸ் பட்ட அடிக்கு நாகாலாந்திலும் மிசோராமிலும் மக்கள் களிம்பு தடவியிருப்பதுதான்.


* பலமா, பலவீனமா?


* தனிக் கட்சி?


* மக்கள் தப்பினார்கள்!

* ஆட்சேபணை



* பிடித்த அம்சம்...



* இலவசப் பந்து!



* ரூ. 20 பரிசு பெறுபவர்:

ஆ. மோகன் குமார்,
அமுதா பார்மசி,
நீடாமங்கலம், — 614 404.

# 60 ரூபாயில் தொடங்கி, வளர்ந்த ஆலமரம்!



* 'இன்குபேட்டர்'

தேர்தல் அறிவிக்கப்பட்டவுடனே ஒரு தொகுதிக்கு நன்மை விளையுமா? விளைந்திருக்கிறது! ஆனால் இப்போது இல்லை, முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால்!

மேற்கு மாம்பலம் பகுதியில், அப்போது தென்சென்னை நாடாளுமன்றத் தேர்தலுக்கு வேட்பாளராக நின்ற டி. டி. கே. அவர்களுக்கு வாக்குச் சேகரிக்க, உற்சாகமான இளைஞர்கள் பலர் வீடு விடாய்ச் சென்றார்கள். அப்போதுதான் முளை அரும்பியிருந்த புதிய குடியிருப்புப் பகுதியான பழைய மாம்பலம் — எந்தவிதமான அடிப்படை வசதியும் இல்லாமல் மிகப் பின்தங்கிய அவலத்தில் இருந்தது.

அன்றைக்குப் பழைய மாம்பலம் வட்டாரத்திலேயே இரண்டு டாக்டர்கள்தான் இருந்தார்கள். வாக்காளர் குறையை அறிந்த டி. டி. கே. சொன்னார். ''எல்லாவற்றுக்கும் அரசாங்கத்தையே எதிர்பாராமல், உங்கள் பகுதியின் முன்னேற்றத்துக்கு நீங்களே ஏதாவது செய்யுங்கள்'' என்று.

முதலில் டி. டி. கே. ஆதரவாளரான அந்த இளைஞர்கள் திட்டமிட்டது மருத்துவ வசதி ஒன்றைத்தான். ஒரு குடிசையைப் போட்டு மருந்து தர ஏற்பாடு செய்தார்கள். மூன்றே மாதங்களில் மருந்தகம் சூடுபிடித்தது. இரண்டு டாக்டர்கள் மட்டுமே வந்து போன அந்த மருந்தகத்தில் மிகக் குறைந்த தொகைக்கு மருந்து வாங்கி விற்றார்கள். அவர்களில் ஒருவர் நுங்கம்பாக்கத்திலிருந்து வந்து போன டாக்டர் லக்ஷ்மி சதுர்வேதி. போக்குவரத்துச் செலவுக்காக அவருக்கு மட்டும் மாதம் முப்பது ரூபாய் தந்தார்கள். மற்றவர் டாக்டர் ராமனாதன். தம்முடைய தந்தை காலமான அன்றைக்குக் கூட மாலையில் இந்தக் குட்டி மருத்துவமனைக்கு வந்துவிட்டாராம் அவர்! தேர்தல் வேட்பாளருக்கு என்று ஒதுக்கப்படும் தொலைபேசியைக் கூட மருத்துவமனைக் குடிசையிலேயே வைத்துக் கொள்ளச் சொல்லி விட்டார் வேட்பாளர் டி. டி. கே. அதே தொலைபேசி பின்னால் இவர்களுக்கு உரிமையாகிவிட்டது. மருந்து, மற்ற பொருள்களுக்காக முப்பது ரூபாய் செலவானது. ஆக மாதம் அறுபதே ரூபாய் 'நிர்வாகச் செலவில்' தொடங்கப்பட்டதுதான் மாம்பலம் பப்ளிக் ஹெல்த் செண்டர். மருந்து ஓர் அணா. ஊசி போட எட்டணா. என்று கட்டணம் பெறப்பட்டது!

தொடங்கி வைத்தவர் — ராஜாஜி. துணை நின்றவர் அமரர் கல்கி. தொடக்க நாளன்று ஒரு ரூபாய் கட்டணம் செலுத்தித் தம் பெயரைப் பதிவு செய்து கொண்டு ஸல்ஃபாடயாஸின் மாத்திரை வாங்கிக் கொண்டார் கல்கி. ராஜாஜியோ தமக்கே உரிய முறையில் ''இந்தச் சுகாதார கேந்திரத்தின் வளர்ச்சி குன்றினால் மகிழலாம்; மூடுவிழா நடத்தினாலோ ரொம்ப சந்தோஷப்படலாம்! அந்த அளவுக்கு மக்களின் ஆரோக்கியம் வளர வேண்டும்'' என்று வேடிக்கையாக, நடக்க முடியாததற்கு ஆசைப்பட்டார்.



* பரிசோதனைக் கூடம்.

* ஹெல்த் சென்டர் கட்டடம் — முன்னணியில் சைக்கிள்கள் கூட்டம்.



இந்த திவ்ய சந்நிதானத்தில் வந்து பலகையில் அமர்ந்து ஒரு மணி நேரம் அருளுரை வழங்கிப் பெருமைப்படுத்தியிருப்பவர் காஞ்சிப் பெரியவர். அவரும் ராஜாஜிக்குப் போட்டியாக ஒரு ஜோக் அடித்தார்: "எல்லாரும் இந்தச் சுகாதார கேந்திரத்துக்கு உதவ ணும். பணம் உள்ளவர் நன்கொடை தரட்டும்; பணம் இல்லாதவர் சரீரத்தால் உழைக்கட்டும்; பணம், சரீர பலம் இரண்டும் இல்லாதவர் கூட நோயாளியாகச் சேர்ந்து உதவலாம்!"

வெறுமனே மருந்தோடு நிற்பானேன் என்று மகப்பேறு வசதிகளிலும் நாட்டம் பிறந்தது. வீடு வீடாய்ப் போய்ப் பணம் கேட்டார்கள். யாருமே முகம் சுளிக்காமல் ஐந்து ரூபாய், பத்து ரூபாய் என்று வழங்கினார்கள். அந்தக் காலத்திலேயே பத்தாயிரம் ரூபாயைச் சுலபமாகச் சேர்த்தார்கள்.

மாநில அரசாங்கம் பத்து மனை நிலம் வழங்கியது. இவர்கள் விலை கொடுத்து இரண்டு மனை நிலம் வாங்கினார்கள். மத்திய அரசாங்கம் நாற்பத்தோராயிரம் ரூபாய் வழங்கியது. இவைதாம் ஆரம்ப கால மூலதனம். இவற்றைத் தவிர அரசுத் தரப்பிலிருந்து எந்த உதவியையுமோ, பொருளையுமோ இவர்கள் எதிர்பார்க்கவில்லை. இன்றளவும் இவர்கள் எதிர்பார்ப்பது அரசுத் தரப்பின் ஊக்கத்தை மட்டும்தான்.

முற்றிலும் சொந்தக் காலிலேயே நிற்கும் இந்த ஆலமரத்துக்குப் பலரும் விழுதுகளாய்ப் பயன்பட்டிருக்கிறார்கள். உதவி அளித்தவர்களின் பட்டியல் போட்டால் அனுமார் வாலாகிவிடும்.

ஹெல்த் சென்டர் வாசலில், காலை நேரத்தில் ஏராளமான சைக்கிள்கள் அணிவகுத்து நிற்கும். 'லோயர் மிடில் கிளாஸ்' என்னும் இரண்டும் கெட்டான் ரகத்து மக்களின் நலன்களைக் கருத்தில் கொண்டு இயங்குகிற நிறுவனம் என்பதையே சைக்கிள் பட்டாளம் காட்டும்.

நிபுணர்கள் என்ற மருத்துவ அலுவலர்களிடம் ஆலோசனை பெற மட்டுமே மிகக் குறைந்த கட்டணம் பெறுகிறார்கள். பொதுவான வைத்தியம் இலவசம். மருந்துக்கும் சோதனைகளுக்கும் மிகக் குறைவான தொகை தான் பெறப்படுகிறது. மருந்து விற்பனையில். விற்பனை வரிச் சலுகையை அரசு வழங்கியிருப்பதால் ஏறக்குறைய அடக்க விலைக்கே மருந்துகள் விற்கப்படுகின்றன. மாம்பலம் வட்டாரம் மட்டுமில்லை, மற்ற பகுதிகளில் உள்ள தனிப்பட்ட டாக்டர்கள் கூட ஹெல்த் சென்டரில் பலவிதமான சோதனைகளுக்கு நோயாளிகளை அனுப்புகிறார்கள். குறைவான கட்டணத்திற்குச் சோதனை செய்யப்படுகிறது என்பதோடு மிகவும் நம்பகமான இடம் என்பது இவர்களின் பெருமை. வேறு தனியார் மருத்துவமனையில் 'டிப்ஸ்' தர ஆகும் செலவில் இங்கே ஆபரேஷனை முடித்துக்கொள்ளலாம் என்று அனுபவஸ்தர் ஒருவர் கூறினார்.

ஹெல்த் சென்டரில் உள்ள குழந்தைகள் — மகப்பேறு நலப் பிரிவும், நரம்பியல் பிரிவும், மனநோய் மருத்துவப் பிரிவும், பிஸியோதெரபி பிரிவும் மிகவும் சிறப்பாகக் கவனத்தைக் கவருகின்றன. இங்கு ஆண்டுக்கு 1200 குழந்தைகள் பிறக்கின்றன என்று ஒரு துண்டுப் பிரசுரம் கூறுகிறது.

பேறு காலத்தில் ஒரு தாய் அடியெடுத்து வைக்கும் பருவம் முதல், குழந்தை பிறந்து வளரும் தொடக்க காலம் வரை இவர்களின் தொடர் கவனிப்பும், ஆலோசனைகளும், வெகு அற்புதமானவை. 'ஆலோசனா' என்கிற பெயரில், தாயாகப் போகும் பெண்களுக்கு வகுப்புக்களே நடைபெறுகின்றன. தாய்ப்பாலைத் தவிர வேறு வகையான புட்டிப்பால் விவகாரங்களைக் கடுமையாகப் புறக்கணிக்கிறார்கள். பால் புட்டி பயன்படுத்துவது கூடத் தடுக்கப்படுகிறது. இதற்கெனக் குழந்தைப் பராமரிப்பு, ஊட்டச்சத்து பாடங்களில் பட்டம் பெற்றவர்கள் பயிற்சி தருகிறார்கள். அதிகம் படிப்பறிவு இல்லாத பாமரத் தாய்மார்கள் கூடப் பாடங்களையும் ஆலோசனைகளையும்



இவர்: உங்களை எதிர்த்து நின்னு, தோற்றுப் போன வேட்பாளர் வந்துட்டுப் போறாரே, என்னவாம்...?

எம். எல். ஏ.: இந்தத் தொகுதியில், அவரும் கிட்டத்தட்ட சரிபாதி வோட்டு வாங்கியிருக்காராம்... அதனால, நான் வாங்கற லஞ்சத்தில், அவருக்கும் அப்பப்ப பங்கு தரணும்னு ஞாபகப்படுத்திட்டுப் போறார்...!

— கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.

மிகக் கவனமாகக் கேட்டுப் பின்பற்றுகிறார்கள் என்று அறியும் போது இந்தப் பணியின் சிறப்புப் புரிகிறது.

முழு வளர்ச்சி பெறாமல், போதுமான உடல் வெப்பம் இல்லாமல், அழக் கூட முடியாமல், பிறக்கும் குழந்தைகள் உண்டு. இவற்றைக் கண்காணித்துக் காப்பாற்றுவதற்காகத் தொட்டில் போன்ற 'இன்குபேட்டர்' அமைப்பு ஒன்றை ஹெல்த் செண்டர் நிறுவனமே வடிவமைத்துப் பயன்படுத்துகிறது. இறக்குமதிச் செலவுகள், பிரச்னைகளிலிருந்து விடுபடுவதுடன், நம்முடைய தேவைக்காக நாமே செய்தது என்ற திருப்தியும் இருக்கிறது.

குழந்தைகளுக்கு, தாயாருக்கு, தவிர வயதானவர்களுக்கும் பயன்படும் வகையில் 'நந்தினி' என்ற பெயரில் கேழ்வரகு, கம்பு, பொட்டுக்கடலை மாவுகளைப் பக்குவப் படுத்தித் தயாரித்துச் சத்துணவாக விற்பனை செய்கிறார்கள்.

தற்போது நூறு படுக்கைகள் கொண்ட இந்த நிறுவனம் மேலும் வளர வேண்டுமானால் மேல்நோக்கித்தான் வளர முடியும். மாம்பலத்தின் நெருக்கடியான பகுதியில் சிறைப்பட்டுள்ள இந்த மருத்துவமனையைப் பக்கத்தில் விரிவுபடுத்த வழியில்லை. மனநோய்ப் பிரிவுக்குக் கட்டடம் கட்டித் தருவதற்காக ஓர் அன்பர் மூன்று லட்ச ரூபாய் தருவதாக ஐந்து ஆண்டுகளுக்கு முன்பே முன்வந்தார். இரண்டாவது மாடியாக இந்தப் பிரிவை எழுப்புவதற்குத் திட்ட வரைவுகளும் தயாராயின. சென்னையில் தீப்பெட்டி அடுக்குகளாய்த் தெருவுக்குத் தெரு பல மாடிக் கட்டடங்கள் எழும் காலத்தில், ஹெல்த் செண்டரில், முற்றிலும் மருத்துவத் தேவைக்காகக் கட்ட விரும்பும் மூன்றாவது மாடியை எழுப்புவதற்கு அனுமதி தரப்படவில்லை. ஏதோ 'டெக்னிகல்' காரணங்கள் கூறப்படுகின்றன. இந்தக் காரணங்களை மறுபரிசீலனை செய்து விதிகளைத் தளர்த்திப் பொதுநலத் தேவை என்ற முறையில் அனுமதி வழங்குவதில் சிரமம் இருக்க நியாயமில்லை. இந்த அனுமதி கிடைக்காததால் பெரிய மனத்தோடு ஓர் அன்பர் தந்துள்ள உதவியைப் பயன்படுத்திக் கொள்ளவும் இயலாத நிலை உருவாகியுள்ளது.

அதேபோல், நவீன மருத்துவக் கருவிகள் வாங்குவதிலும் இறக்குமதிச் சலுகையை இவர்களால் பெற முடியவில்லை. ஒரு குறிப்பிட்ட அளவு இலவசமாக மருத்துவ உதவி தரும் நிறுவனங்களுக்கு மட்டுமே இந்தச் சலுகை பெற விதிகள் இடமளிக்கின்றன என்று கூறுகிறார்கள். மருத்துவ வசதி, மருந்துகளின் விலை, சோதனைக் கட்டணம், அறை வாடகை, சர்ஜரிக் கட்டணம் எல்லாவற்றிலுமே நினைத்துப் பார்க்க முடியாத அளவு குறைவான தொகையையே வசூலித்து, எந்த மக்களுக்கும் பாகுபாடில்லாமல் வரப்பிரசாதமாக விளங்குகிற 'பப்ளிக் ஹெல்த் செண்டர்' அமைப்பின் நோக்கமும் குறிக்கோளும் அரசால் சரிவரப் புரிந்து கொள்ளப்படவில்லை என்பது வருந்துதற்குரியது. இவர்களும் பழைய காலத்து ராஜாஜி மனப்பான்மையில், 'கடமையைச் செய் — பலனை எதிர்பாராதே' என்ற தத்துவத்தில் இயங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

1953 — இல் இவர்கள் 'ஹெல்த் செண்டர்' அமைப்பைத் தொடங்கிய போது ராஜாஜியிடம் போய் வாழ்த்துச் செய்தி கேட்டார்கள். அப்போது ராஜாஜி தந்த வாழ்த்துரை: ''இதைச் செய்யப் போகிறோம், அதைச் செய்யப் போகிறோம், இதைத் திட்டமிட்டிருக்கிறோம்; அதைத் திட்டமிட்டிருக்கிறோம்; என்று எழுதுவதும் அ ச் ச டி ப் ப து ம் தற்கொலைக்கு ஒப்பானது. எதைச் செய்து முடித்திருக்கிறோமோ, அதை மட்டுமே சாதனை என்று பதிவு செய்ய வேண்டும். தம்பட்டம் அடித்துக் கொண்டு மகிழ்ச்சியடைவதைத் தவிர்ப்போம். உண்மையான வேலைக்கு மாற்றாக எதுவுமே இல்லை.''

— இதை எழுத்துக்கு எழுத்து போற்றிப் பின்பற்றுகிறார்கள் இவர்கள்.

கட்டுரை முழுவதும் 'இவர்கள்' 'இவர்கள்...' — என்றே குறிப்பிட்டுள்ளோம். இவர்கள் என்று யாரைக் குறிப்பிட? நிர்வாகக் குழு என்று இருபது பேர் இருக்கிறார்கள். இவர்கள் எந்த மேடையிலும் விழாவிலும் கூட முகம் காட்டுவதில்லை. பின்னணியிலிருந்து பணியாற்றுகிற இவர்களுடைய பலம் ஹெல்த் செண்டர் என்ற அமைப்பின் வடிவில் வெளியே தெரிகிறது.

வட்டார வளர்ச்சியில் அக்கறை கொண்டு ஊதியம் ஏதும் வாங்காமல் கௌரவப் பணியாற்றுகின்ற பலரின் கூட்டு முயற்சியில் பிரகாசிக்கும் ஹெல்த் செண்டரின் பணியை அரசு பாராட்டிக் கைகொடுத்தால் மட்டும் போதாது! மற்ற பகுதியினரும் பொறாமையோடு இதைப் பார்த்துப் பின்பற்றக் கற்றுக் கொள்ள வேண்டும்!

**சுப்ர. பாலன்**

புகைப்படங்கள்: **யோகா**



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி.

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542 — இல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 90 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க, உணவு வகையினை அனுசரித்து சுமார், முறையே ரூ. 250/- அல்லது 300/- அல்லது 500/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 2500/- அல்லது 3000/- அல்லது 5000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்பவேண்டிய பெயரும் முகவரியும்:

**அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**D — 76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**
**கும்பகோணம் — 612 001.**

****இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு****



# நல்லோர்களின் பெருமை



ஆன்மீக புருஷன் தன்னிடமுள்ள ஆன்மீகத்தை எண்ணத்தின் மூலம் பிறரிடம் செலுத்தலாம். எண்ணம் வலிவு மிகப் படைத்தது. ஆன்மீக புருஷன் குகைக்குள் தன்னை அடைத்து வைத்துக்கொண்டு ஓர் உயர்ந்த எண்ணத்தை எண்ணுவாரா கில் குகையின் சுவர்களையெல்லாம் அது துளைத்துக்கொண்டு வெட்ட வெளி முழுதும் அவ்வான்மீக அலைபரவி மனித சமுதாயம் முழுவதையும் ஊடுருவிச் செல்கிறது.

சுவாமி விவேகானந்தர்.

ஆதாரம்: தர்மச்சக்கரம்.

---

## ராஜாஜி வாழ்க்கை வரலாறு — VI
ராஜ்மோகன் காந்தி

பிரகாசம் 1957—ல் காலமானார். ''ஆந்திர மாநிலத்தில் இன்று கண்ணீர் உகுக்காத இல்லமே இல்லை'' என்று எழுதினார் ஸி.ஆர். அவர் அளித்த இரங்கல் செய்தி, தமது எதிரியையும் போற்றுகிற பண்போடு சிறந்த பாராட்டுரையாக அமைந்தது. மேலும் சில இலைகள் உதிர்ந்தன...

ஒருநாள் மாலை நண்பர் ஏ.வி. ராமன் வீட்டில் உற்சாகமாகப் பொழுது போக்கிவிட்டு ஸி.ஆர். இல்லம் திரும்பிய சமயம் டெலிஃபோன் ஒலித்தது. 'பம்பாயில் தேவதாஸ் காலமானார்' என்பதாகத் தகவல் கிடைத்தது. இரவு விமானத்தில் பயணப்பட்டார். பாதி வழியில் நாகபுரியில் விமானம் இறங்கிய போது, டில்லியிலிருந்து பம்பாய் சென்று கொண்டிருந்த தமது பேரன் ராமச்சந்திரனை — தேவதாஸின் மகனை — விமான நிலையத்தில் சந்தித்தார் ஸி.ஆர். பேரனைப் பார்த்ததும் அவரால் அழுகையைக் கட்டுப்படுத்திக் கொள்ளவே முடியவில்லை. விம்மி விம்மி அழுதார். ''மணியான மாப்பிள்ளை; மணியான மகன். எல்லாம் நொறுங்கியது'' என்று நண்பர் ராமராவுக்கு எழுதினார் ஸி.ஆர். நாற்பது ஆண்டுகளுக்கு முன் ஹிந்தி கற்றுத் தருவதற்காகத் தென்னாட்டுக்குப் பதினெட்டு வயது வாலிபனாக வந்தார், காந்தி மகன் தேவதாஸ் காந்தி. அப்போது முதல் ஸி.ஆரும் தேவதாஸும் ஒருவரிடம் ஒருவர் ஆழ்ந்த அன்பு கொண்டிருந்தனர். தேவதாஸின் மரணமானது, தமது மகள் லக்ஷ்மிக்கு ஏற்பட்ட இழப்பு, தமது இழப்பு என இரண்டு விதமாகவும் சேர்ந்து ஸி.ஆரைத் தாக்கியது; வேதனை அளித்தது. மூன்று ஆண்டுகளுக்கு முன்பு அமெரிக்க நண்பர் ராம்ஸே, தேவதாஸையும் லக்ஷ்மியையும் தாம் சந்தித்து விட்டு வந்தது பற்றி ஸி.ஆருக்குக் கடிதம் எழுதியிருந்தார். அதற்குப் பதில் வரையும் போது ஸி.ஆர். லக்ஷ்மி பற்றிப் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்:

''என் மகள், தன் தாயாரைத் தெரிந்து கொள்ளவோ அல்லது நினைவில் வைத்துக் கொள்ளவோ முடியாத குழந்தையாக இருந்த போதே அவளை இழந்து விட்டாள். நான்தான் லக்ஷ்மியை முழுக்க முழுக்க வளர்த்தேன். அதனால் அவளிடம் எனக்குக் கொஞ்சம் பிரியம் அதிகம்தான்!''

இப்போது பன்னிரண்டு வயதான தேவதாஸின் மகன் கோபுவுக்கு ஸி.ஆர். பின்வருமாறு எழுதினார்:

''நீ உன் வசமிழந்து வருத்தத்தில் ஆழ்ந்து போகக் கூடாது. அப்பா, அவர் உடலில் இல்லை; உன் நினைவில் வாழ்கிறார். உன் நினைவில் அவர் ஓர் அழகிய வடிவமெடுத்திருக்கிறார். கடவுளுக்கு நிகரான அற்புதமான வடிவம் அது. வேறு எத்தனையோ பேர் தங்கள் தந்தையின் மரணத்தைச் சந்தித்துப் பெரியவர்களாக வளர்ந்திருக்கிறார்கள் என்பதை மறக்காதே.''

## எதிர்க் கட்சி பற்றிய எண்ணம்!

1958—ல் ஏ.வி. ராமனும் காலமானார். ''என் தந்தை விதவையானது போல் உணர்கிறார்'' என்று, ஸி. ஆரின் ஆழ்ந்த துயரத்தை மோனிகா ஃபெல்டனுக்கு உணர்த்தினார் நாமகிரி.

இவற்றுக்கு மறுபக்கமாகக் குடும்பத்தில் சில சுப நிகழ்ச்சிகளும் நடந்து ஸி.ஆரை அவ்வப்போது மகிழ்வித்தன. ஸி.ஆர். கிருஷ்ணசாமியின் மகளும் ஸி.ஆரின் பேத்தியுமான ஜானகியின் திருமணம் 1956 பிற்பகுதியில் நடந்தது. தேவதாஸின் மரணத்துக்குச் சில காலம் முன்பாகவே அவர் மகள்



• ... — விலைமதிக்க முடியாத...



• சதாசிவம் — ...பக்கபலம்.

தாராவுக்குத் திருமணம் முடிந்திருந்தது. இளம் வயதிலேயே காலமாகி விட்ட ஸி.ஆரின் ஒரு மகன் ராமுவின் மகள் இந்திராவுக்கு 1958—ல் திருப்பதியில் திருமணத்தை முன்னின்று நடத்தி வைத்தார் ஸி.ஆர்.

பேத்தியின் திருமணத்துக்குப் பிறகு, "தாரா ரொம்ப சந்தோஷமாக இருக்கிறாள்; நம்மைப் போன்ற வயதானவர்களுக்கு வேறென்ன வேண்டும்?" என்று கேட்டு ராமராவுக்குக் கடிதம் எழுதியிருந்தார் ஸி.ஆர். ஆனால் அப்படி இலகுவாக அவர் மனம் அமைதி அடைந்து விடவில்லை. நாட்டிலும் உலகிலும் நடக்கின்ற பல விஷயங்களைப் பற்றிய தமது கருத்துக் குவியல்களை அவர் வெளியிட வேண்டி யிருந்தது. இதற்கு அவர் கல்கியைப் பயன் படுத்திக் கொண்டிருந்தார். இப்போது அவருக்கு ஒரு புதிய அரங்கமும் கிடைத்தது: 'சுயராஜ்யா' என்ற ஆங்கில வார இதழ். தெளிவாகவும் துணிவாகவும் எழுதிய காஸா சுப்பாராவ் அதன் ஆசிரியர். கடந்த காலத்தில் பல சந்தர்ப்பங்களில் அவர் ஸி.ஆரைத் தாக்கி எழுதியிருந்தார். ஆனால் அதைப் பற்றி இருவருமே கவலைப்பட வில்லை. இப்போது சுயராஜ்யாவை ஸி.ஆரின் எண்ண ஓட்டங்களுக்கு ஒரு வடி காலாக உருவாக்கித் தர காஸா தயாராக இருந்தார். கல்கியைப் பிரசுரித்து வந்த சதாசிவம், சுயராஜ்யாவை நஷ்டமின்றி நடத்தித் தரும் பொறுப்பை ஏற்றுக் கொள் ளத் தயாரானார். மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு சுயராஜ்யாவை நடத்தும் பொறுப்பு முழுவதையுமே கல்கி நிறுவனத்திடம் ஒப்படைத்து விட்டு ஆசிரியராக மட்டும் இயங்குவதில் நிம்மதியும் திருப்தியும் அடைந்தார் காஸா. காஸாவும் சதாசிவமும் ஸி.ஆருக்கு விலை மதிக்க முடியாத பக்க பலமாக விளங்கினார்கள்.

சூயஸ் கால்வாய் யுத்தம், ஹங்கேரி மீது ருஷ்யப் படையெடுப்பு, சூ என் லாய் விஜயம், ஐஸன்ஹோவரின் வெற்றி என்று பல விஷயங்களைப் பற்றி எழுதினார் ஸி.ஆர். இந்தியாவில் தேர்தல் வந்தது. 1956 முதல் காங்கிரஸ் கட்சி உறுப்பினர் என்ற உரிமையைக் கூடத் தக்க வைத்துக் கொள் ளாத ஸி.ஆர்., "யாருக்கு வோட்டு?" என்று தலைப்புப் போட்டு எழுதினார். அவர் தமது கட்டுரையில் அளித்த பதில், "நல்லவருக்கு வோட்டுப் போடுங்கள்" என்பதே. கடந்த காலத்தில் அவர் 'காங்கிரஸுக்கு வோட்டுப் போடுங்கள்' என்றே கூறியும் எழுதியும் வந்திருந்தார். தேர்தல் முடிவுகள் வெளி யான போது கேரளம் தவிர மற்ற எல்லா இடங்களிலும் 'காங்கிரஸே வெற்றி பெற்றிருந்தது. கேரளத்தில் கம்யூனிஸ்டுகள் வெற்றி பெற்றிருந்தனர். சென்னையில் காமராஜ் மீண்டும் முதல்வரானார். காங் கிரஸின் வெற்றிகளுள் ஒன்று, ஸி.ஆர். நரசிம்மனின் வெற்றி. ஸி.ஆரின் மகன் நாடாளு மன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தார்.

இறையுணர்வு பற்றியும் நகரங்களில் பெருகி வரும் சேரிகள் பற்றியும் கட்டுரை கள் எழுதி வந்த ஸி.ஆர்., அரசியல் ரீதியா கவும் நிறைய சிந்தித்து வந்தார். 1957 ஆகஸ்டு 17 சுயராஜ்யா இதழில் அவர் எழுதிய கட்டுரை, அவரது சிந்தனை எந்தத் திசையில் செல்கிறது என்பதை நன்கு உணர்த்தியது.

"ஒரு ஜனநாயக அரசின் ஆரோக்கியத் துக்கு, சக்தி வாய்ந்த எதிர்க் கட்சி இன்றிய மையாதது" என்று தொடங்கியது அந்தக் கட்டுரை!

(தொடரும்)



அடுத்த இதழில்...

# அதிசயமான அணு-மருத்துவம்

— சிறப்புக் கட்டுரை

இவ்விதழில் இடம் பெறுவதாக அறிவிக்கப்பட்டிருந்த கல்லூரி மாண விகள் கலந்துரையாடல் அடுத்த இதழில் இடம் பெறும்.

# N.S.K.

## குரூப் கம்பெனிகள் வழங்கும் சிறப்பு சலுகைகள்




**16.2.89**

| குரூப்புகள் | சேரும் அங்கத்தினர்களுக்கு |
|---|---|
| 200 × 25 = 5000<br>100 × 50 = 5000<br>100 × 100 = 10000 | எவர்சில்வர் பிளேட் |
| 400 × 25 = 10000<br>200 × 50 = 10000<br>250 × 100 = 25000 | எவர்சில்வர் கிண்ணம் (மூடியுடன்) |
| 1000 × 25 = 25000<br>500 × 50 = 25000<br>500 × 100 = 50000 | எவர்சில்வர் தவலை |
| 2000 × 25 = 50000<br>1000 × 50 = 50000<br>1000 × 100 = 100000 | காப்பர் பாட்டம் பாத்திரம் (Copper Bottom Pan) |
| 2500 × 40 = 100000<br>2000 × 50 = 100000 | வாட்டர் பில்ட்டர் |

**இலவச பரிசுகள்**
**1-2-89 முதல் 28-2-89 வரை**



## N.S.K. சிட்பண்ட்ஸ் (பி) லிமிடெட்


38-B, ... தி. நகர், சென்னை-600 017
தொலைபேசி எண்: 445252, 442950


### போனஸ்

1. சேர்த்து விடும் அங்கத்தினருக்கு 1% போனஸ்
2. பிரதிமாதம் தவறாமல் பணம் செலுத்துவோருக்கு கட்டிய தொகையில் 1% போனஸ்

### சிறப்பு பம்பர் பரிசு

பிப்ரவரி மாத இறுதிக்குள் சீட்டில் சேர்பவர்களுக்கும், டெபாஸிட் செய்பவர்களுக்கும், நிலம் வாங்குவோருக்கும் சிறப்பு கூப்பன்கள் வழங்கப்படும்.
குலுக்கல் நாள்: 1.3.89
பம்பர் பரிசு: **1800 சதுர அடி உள்ள வீட்டுமனை**
ஆறுதல் பரிசுகள்: முன், பின் எண்களுக்கு சைக்கிள்





## N.S.K. பில்டர்ஸ்


38-B, ... தி. நகர், சென்னை-600 017
தொலைபேசி எண்: 445252, 442106


| 1 வருடம் | 2 வருடங்கள் |
|---|---|
| **16%** | **17%** |
| **3 வருடங்கள்** | **5 வருடங்கள்** |
| **18%** | **20%** |

போனஸ்: பிப்ரவரி மாத டெபாஸிட்டுகளுக்கு **2% போனஸ்**



## N.S.K. ரியல் எஸ்டேட்ஸ்


38-B, ... தி. நகர், சென்னை-600 017
தொலைபேசி எண்: 445252, 442106


**N.S.K. நகர் — திருநின்றவூர்**

- M.M.D.A. எண் P.P.D/LO/10/87
- 1800 சதுர அடி விலை ரூ 20,000
- வல்லக்கோட்டை அருகில் தவணை விற்பனை: ரூ 1500 முதலில் செலுத்தி மீதியை 10 மாத தவணையில் ரூ 200 வீதம் செலுத்தலாம்.

## வளமான வாழ்க்கைக்கு N.S.K.

Exelads

பார்த்தேன்; படித்தேன்; ரசித்தேன்! சிரித்தேன்!!

* புதிய தொடர் கதையின் ஆரம்பம் விறு விறுப்பாய் இருக்கிறது. ஆனால் முதலில் தெய்வநாயகம் என்று இருந்த மாமாவின் பெயர் இறுதியில் தேவசகாயம் என்று மாறி விருக்கிறதே ஏன்?

சேலம் — 7. இ. எச். வி. பாபு.

* 'தேர்தல் நிலவரங்கள்' படு சூப்பர் ஆக இருந்தன. அதே நேரத்தில் ஜெயலலிதாவுக் குக் 'கௌரவப் பிரச்னை', ஜானகி 'மவராசன் பெண்சாதி', நிர்மலா — 'சரி யான போட்டி!' போன்ற பொருத்தமான பட விளக்கம் கொடுப்பதற்குத் தங்களை விட்டால் வேறு ஆளே கிடையாது என்று சொல்லலாம்!

சென்னை — 23. வண்ணை கணேசன்.

* காரம், மணம், மிதமாக இருந்த தேர்தல் சிப்ஸை நொறுக்கி விட்டு, தேர்தல் ஜூஸி நிபூஸை உள்ளே தள்ளியதும் மிகவும் குளிர்ச்சியாகி விட்டது... ஆனால் சுவை குன்றவில்லை...!

மேல்பட்டி. எல். மாறன்.

* சீனாவில் வீட்டை விட்டு விரட்டப்பட்ட குயீப்பெங்கிங் பற்றிய செய்தியாக மட்டு மின்றி, சீன நாட்டின் 'யின்'—'யாங்' தத்து வங்கள் முதற்கொண்டு பெண்களின் அடிமைத்தனத்தை விளக்கும் சீனப் பழமொழிகள் வரை ஆய்வுக் கண்ணோட் டத்துடன் மனம் செலுத்தி, கட்டுரையை அமைத்திருக்கிறார் திலகவதி. 'மாறுதலைக் கொண்டு வருவதில் மிகச் சிரமமான பகுதி குடும்பச் சூழலே' என்ற அவரின் கருத்து, சமூக மாறுதலுக்காக உழைப்பவர்களும், சிந்திப்பவர்களும் கவனத்தில் பதித்துக் கொள்ள வேண்டிய மிக முக்கியமான கருத்து.

திருக்குவளை. வெற்றிப்பேரொளி.

* பாளை. செல்வ கணேசனின் "ஒரு தொகுதியில் தேர்தல் நடக்கிறது" சரியான நேரத்தில் வெளியான சிறுகதை. அயோக்கி யன் என்று தெரிந்தும் கட்சி மேலிடம் தம்பியை வேட்பாளராக நிறுத்தினாலும் அவனை எதிர்த்துப் போட்டி வேட்பாளராக நிற்கும் அண்ணனின் லட்சிய நோக்கு ஒரு பக்கம். அண்ணனைச் சாகடித்து, அவன் மரணத்தைப் பயன்படுத்தி அனுதாப ஓட்டுப் பெற்று வெற்றி பெறும் தம்பியின் மோச டித்தனம்.... நயவஞ்சக அரசியல் பின்னணி; பலே! விழிப்புணர்ச்சியைத் தூண்டிய கதை.

மதுரை — 2. எஸ். லெட்சுமணன்.

* தமிழன்பனின் 'வாக்கு வரந்தரும் தெய் வமே!' கவிதை அருமையோ அருமை என் றால்; அந்தக் கவிதைக்கு உயிர் கொடுத்தது அரஸின் அந்த ஓவியம்! அதிலும் வாக்கா ளர் காதில் பூ வரைந்த 'அரஸ்', வாக்காள ரின் நிலைமையை அருமையாக உணர்த்தி விட்டார்! பாராட்டுக்கள்!

மயிலாடுதுறை. கிருட்டிண. எழில்.

* டாக்டர். எம். எஸ். உதயமூர்த்தியின் கட்டுரை மெய்சிலிர்க்க வைத்தது. ஒவ் வொரு கட்சியாக அவர் வாரி இருப்பது. அவர் யாருக்காகவும் பேசவில்லை, நியா யத்தைத்தான் சொல்கிறார் என்பதை உணர்த்தியது.

வைத்தீஸ்வரன் கோவில். வை. ஆ. யதார்த்தினி.

* தான் ஆட்சியைப் பிடிக்க வேண்டும் என்ற ஒரே குறிக்கோளோடு எல்லா கட்சி களுமே பொருளாதாரத்தைப் பற்றிக் கவலைப்படாமல் தேர்தல் அறிக்கைகளைத் தண்ணீரில் போடும் கோலம் போல் வாரி யிறைத்து, 'பின் நிறைவேற்றாமல் பறக்க விடப் போகின்றன என்பதை டாக்டர். எம். எஸ்.உ., கூறி, கல்கியைப் போன்றே தானும் நடுநிலைமைவாதி என்பதை நிரூபித்து விட்டார்.

திருக்கடையூர். இரா. சாந்தி.

* தேர்தலின் போது வாக்காளர்களைத் தெய்வத்திற்கிணையாக மதித்துப் பணி விடை செய்யும் வேட்பாளர்கள், தேர்தல் முடிந்த பின்னர் மக்களின் அடிப்படைத் தேவைகளைக் கூடக் கவனிக்காமல் புறக் கணிக்கும் தன்மையை "வாக்கு வரம் தரும் தெய்வமே" என்ற கவிதை மூலம் தமிழன்பன் அவர்கள் கிண்டல் செய்த பாணி அலாதியானது. அதற்கு அரஸ் வரைந்த ஓவியம் அசத்தல்!

மதுரை — 7. மதுரை எஸ். செல்வன்.

* தமிழன்பன் எழுதிய "வாக்கு வரந்தரும் தெய்வமே!" கவிதையும், அந்தக் கவிதைக் காக ஓவியர் அரஸ் தீட்டிய நகைச்சுவை ததும்பி வழியும் சித்திரமும் 'டாப் கிளாஸ்' தான் போங்கள்! அவற்றைப் பார்த்தேன்! ரசித்தேன்!! படித்தேன்!!! சிரித்தேன்!!!! படமும், கவிதையும் மற்ற எல்லா ஜோக்கு களையும் தூக்கிச் சாப்பிட்டு ஏப்பம் விட்டு விட்டன.

சிதம்பரம். தங்க. குஞ்சிதபாதம்.

* தலையங்கம் மிகப் பிரமாதம். சராசரி மனிதன் என்ன நினைப்பானோ அதை அப்படியே பிரதிபலித்து விட்டீர்கள். 'தேர்தல் தலையங்க' ஓட்டெடுப்பில் கல்கி யின் தலையங்கம்தான் அதிக ஓட்டுக்களைப் பெறும் என்பதில் எள்ளளவும் சந்தேகமே யில்லை.

சென்னை — 4. தி. க. ஸ்ரீராம்.

* 'ஆட்சியில் அமரும் கட்சியை விட எதிர்க் கட்சிக்குத்தான் பொறுப்பு அதிகம்' என்ற உங்கள் தலையங்க வரிகளைப் படித்த போது ஒரு விஷயம் சொல்லத் தோன்றியது. இங்குள்ள எதிர்க் கட்சிகள், தேர்தலில் தோற்றதை மனத்தில் வன்மமாக வளர்த்துக் கொண்டு, ஆளுங்கட்சி அபூர்வமாகச் செயல் படுத்தும் நல்ல திட்டங்களைக் கூட குறை கூறிக் கொண்டு திரிவதும், சட்ட சபையின் கண்ணியத்தைக் குலைப்பதும், வருஷத்திற்கு ஒருமுறையேனும் 'பந்த்' என்ற பெயரில், மக்களை இம்சிப்பதும் நிகழ்கிறது. இதற் கெல்லாம் காரணம் கூடத் தேர்தலில் தோற் றதை அவமானமாகக் கருதுவதுதான்!

திருத்துறைப்பூண்டி. ஜெயந்திப்ரியன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157: ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
அறுமாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

# "விலையில் மயங்கி தரங் குறைந்த ஸ்டீல் அலமாரியை வாங்குவானேன் தரங்கெட்ட வேலைப்பாடு, துரு மற்றும் உரியும் பெயிண்ட்டோடு போராடுவானேன்?"



## வாங்குங்கள், ஒரு கோத்ரெஜ் ஸ்டோர்வெல்

ஏனெனில் இதர ஸ்டீல் கப்போர்டுகள் வென்றிட முடியாத அநேக சிறப்பு அம்சங்களைக் கொண்டது கோத்ரெஜ். இது முதன்மைத்தர ஸ்டீலினால் நூதனத் தயாரிப்பு முறையில் உருவானது. விளிம்பற்ற இயந்திர முறை உருவாக்கம் என்பதால் பூச்சி பொட்டுகளிலிருந்து நிச்சயமான பாதுகாப்பு. பல்வேறு கட்டங்களில் கொடுக்கப்பட்டுள்ள தேய்மான எதிர்ப்புத் திறன், மற்றும் துருப்பிடிக்காத மேன்மை. தனிப்பட்ட ஓவன்-பேக் முறையில் பூசப்பட்டுள்ள அல்கைட் அமினோ வண்ணப் பூச்சு காரணமாக, கீறல் விழாத புதுமை மெருகுடன் ஆண்டு கணக்கில் நிலைக்கிறது. தவிரவும் வழக்கமான மரம் அல்லது ஸ்டீல் கப்போர்டுகளில் இல்லாத, விசேஷ மும்முனைப் பூட்டமைப்புடன் கூடிய 6-லீவர் கோத்ரெஜ் பூட்டும் இதில் உண்டு.

பலவிதமான மாடல்களில் வண்ணங்களில் கிடைக்கும் கோத்ரெஜ் ஸ்டோர்வெல் தரத்தில் குறைவான ஸ்டீல் கப்போர்ட்களைப் போல அல்ல. தொய்வுறும் கீல்கள் இல்லை, உரியும் பெயிண்ட்டுகள் இல்லை. ஆயுளைக் குறைக்கும் துரு கிடையாது.

எனவே குறைவான விலை, பின்னால் உங்களைப் பிரச்னையில் ஆழ்த்திவிட இடம் தராதீர்கள். இன்றே வாங்குங்கள் கோத்ரெஜ் ஸ்டோர்வெல்.

**கோத்ரெஜ் ஸ்டோர்வெல் — நீங்கள் கொடுக்கும் பணத்திற்குக் கூடுதல் மதிப்பைத் தருகிறது.**

ULKA-GB-21-88 TAM

பால் தேவைப்படும் போதெல்லாம், அமூல்யா
இன்ஸ்டன்ட் மில்க்மிக்ஸ் கொண்டு தயார்
செய்யுங்கள். வெதுவெதுப்பான நீரில் கலந்து,
உங்களின் டீ அல்லது காப்பிக்கு உபயோகியுங்கள்.
அல்லது பாலாகவும் உபயோகிக்கலாம். இதன்
ருசி உங்களுக்கு மிகவும் பிடிக்கும். காரணம்
இதனை அளிப்பது அமூல். இதில் அமூல்
கொண்டுள்ள சுவையும் தூய்மையும் உண்டு.




# Amulya

## Instant Milkmix

**பால்-எப்போது தேவையோ அப்போது**






விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப். மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிட்.
ஆனந்த்-388 001.

ULKA-3-88-T